தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்



# சங்கரமூர்த்திக் கோவை



உ. வே. சாமிநாதையர்
நூலகச் சுவடி

பதிப்பாசிரியர்
புலவர் சுந்தரமூர்த்தி

பொறுப்பாசிரியர்
டாக்டர். இரா. நாகசாமி

வெளியிட்டோர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
1981.






செ. அரங்கநாயகம்
கல்வி அமைச்சர், தமிழ்நாடு அரசு

செயின்ட்ஜார்ஜ் கோட்டை,
சென்னை-600009.

தமிழ்நாடு அரசு இதுகாறும் அச்சில் வெளிவராத பழம் ஓலைச்சுவடிகளைப் படி எடுத்து அச்சிட்டுப் பதிப்பிக்க ஒரு திட்டத்தை மேற்கொண்டுள்ளது. அதற்கு உரிய பண ஒதுக்கீடு செய்துள்ளது. தமிழ்நாட்டிலும், மற்றும் நாட்டின் பிற பகுதி களிலும், பல்வேறு சுவடி நூலகங்களில் தமிழக மருத்துவம், கணக்கு, இசை, நாட்டியம், சிற்றிலக்கியங்கள், பேரிலக் கியங்கள் இன்னபிற நூல்கள் அச்சிடாமல் இருப்பது கணக் கிடப்பட்டுள்ளது. நாட்டில் உள்ள பல்வேறு சுவடி நூலகங் களையும், அந்நிறுவனங்களில் உள்ள அச்சில் வராத நூல்களை அச்சிடும் பணிக்கு உதவுமாறு அரசு கேட்டுள்ளது. பல்வேறு நூலகத்தார்களும் தேவையான வசதிகளை அளிக்க மனமுவந்து முன் வந்துள்ளனர். தமிழ்த் துறையில் வல்லுநர்கள் இந்நூல் களை ஆராய்ச்சிக் குறிப்புடனும், முன்னுரையுடனும் பதிப் பித்துத்தர முன்வந்துள்ளனர். இந்த நூல்கள் ஆங்கிலத் திலும், தமிழிலும் அடிக்குறிப்புக்களுடன் வெளியிடப்படும். ஓலைச்சுவடிகளைத் தேர்ந்தெடுத்துப் படி எடுத்துப் பதிப்பிக்கும் பணியைத் தொல்பொருள் ஆய்வுத்துறை, மேற்கொண்டுள்ளது.

இதுகாறும் 75 நூல்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் பல அச்சாகி இந்நூல் வரிசையில் வெளி வருகின்றன. அரசின் இந்தப் பணியில் ஒத்துழைக்க முன்வந்துள்ள ஆராய்ச்சி வல்லுநர்களையும், தமிழ்ப் பெரியோர்களையும், சுவடி நூலகங் களையும் நான் வாழ்த்துகின்றேன். இதுபோன்று விரைவில் அச்சில் வராத அனைத்து நூல்களும் ஆராய்ச்சியாளர்களுக்கும் கல்வி நிறுவனங்களுக்கும் மற்றும் பொது நூலகங்களுக்கும் கிடைக்கும் வகையில் வெளிவரும் என்பதில் ஐயம் இல்லை. இதன் பயனாய் காலந்தோறும் தமிழில் தோன்றிய பல்வேறு கருத்துக்களையும் பண்பாட்டையும் முழுமையாக அறிந்து கொள்ள இயலும் என்பதில் ஐயம் இல்லை.

செ. அரங்கநாயகம்
27-12-1980



C. ARANGANAYAGAM
Minister for Education
Government of Tamilnadu

Fort St. George
Madras-600009.
27-12-80

The Government of Tamilnadu, under a special scheme of publication of unpublished Tamil Manuscripts have come forward to undertake the printing and publishing of all the available unpublished Tamil Manuscripts in the State. Necessary funds towards the publication have been provided for the purpose. It is estimated that several hundred unpublished Tamil manuscripts dealing with native medicines, mathematics, music, fine arts, and literary compositions of various nature, are lying unpublished in different Manuscripts Libraries of this State and also in other parts of the country. Various Manuscript Libraries in the State, have been approached to make available their unpublished texts for publication. The authorities of these Manuscripts Libraries have come forward with interest and enthusiasm to afford necessary facilities for the same. Eminent Tamil Scholars, well-versed in the art of editing have been requested to take up the work of editing. Under the scheme the texts will be critically edited with suitable foot-notes and brief introductory analysis both in English and Tamil for the benefit of researchers and scholars. The selection of manuscripts, copying and editing have been entrusted to the Tamilnadu State Department of Archaeology.

So far the texts of 75 manuscripts have been copied and a number of them edited and are made available in printed form in this series. I am thankful to all the institutions and scholars who have come forward to join the Government in this venture. It is only a beginning and I do hope that all the available texts will be in the hands of scholars, educational institutions and public Libraries, so that the contribution of the Tamils through the centuries in different fields will be available for the proper understanding and comprehension of the Tamil Language, Literature and Culture.

C. ARANGANAYAGAM
27-12-80.

# INTRODUCTION

'Sankaramurtik-Kovai' is a manuscript, preserved in Dr. U. V. Swaminatha Iyer Library. It is a 'Kovai' literature, on the patron Sankaramūrti of Nallur, in Ten Pāṇḍinādu. From the references in the text, it is learnt that the patron was a Vellāla by caste, who had the plough as his flag. He is said to belong to the Ganga Kula family. Sankaramūrti was a great Tamil scholar, well versed in the '*Thirukkural*' of Valluvar. Among his titles Anapāyan and Abirāma, deserve special mention. He was a great devotee of Lord Siva of Tirunelveli and Lord Vishnu of Alwar Thirunagari.

The name of the author of this text is not known.

A manuscript 'Thiruvenkatanāthan Vandu vidu tūdu' is also preserved in U. V. Swaminatha Iyer library which is published in the series. From that work it is learnt that one Sankaramurti was a brother-in-law of the patron Thiruvenkatanathan of Kurukur. It is not unlikely that this text Sankaramurtikkovai is on the patron identical with the one mentioned in 'Thiruvenkatanathan vandu vidu tūdu'. This text is therefore assignable to the 18th century A.D.

I am thankful to Pulavar Thiru K. Sundaramoorthy for having critically edited this text For the authorities of Dr. U.V· Swaminatha Iyer Library, Thiruvanmiyur, I express my thanks for making available this text for publication.

R. NAGASWAMY

# உள்ளடக்கம்

# ஆராய்ச்சி முன்னுரை

## கோவையின் இலக்கணம்

அன்பும் பண்பும் அறிவும் திருவும் முதலாயவற்றில் தம்முள் ஒப்புடையராய் விளங்கும் தலைவனும் தலைவியும் ஊழ்வினை வயத்தால் தாமே எதிர்ப்பட்டு மனங்கலந்து களவில் ஒழுகுதலும், பின்னர்த் திருமணமாகிக் கற்பில் ஒழுகுதலும் ஆகிய இரு நிலைகளையும் புனைந்துரை, உலகியல் எனும் இரு திறத்தினும் எடுத்துரைக்கும் நூல் கோவை எனப்படும். இந் நூலின் செய்யுட்கள் கட்டளைக் கலித்துறை என்னும் பாவினத்தால் பாடப்பெறும். கோவை நூல் 'நலனுறு கலித்துறை நானூறாக' நடக்க வேண்டும் என்ற விதி இருப்பினும் புலவர்களின் கற்பனைக்கு ஏற்ப நானூற்றுக்கு மேற்பட்ட செய்யுட்களைக் கொண்ட கோவைகளும் உள்ளன. இந் நூலில் உள்ள செய்யுட்கள் நாடக நூலைப் போலத் தலைவன் தலைவி முதலாயினோரின் கூற்றாக அமைந்திருக்கும். இங்ஙனம் ஒவ்வொரு செய்யுளிலும் வரும் கூற்றுக்கள் ஒன்றோடொன்று தொடர்புபட்டுக் கோவையாகச் செல்வதால் இந் நூலுக்குக் கோவை எனப் பெயர் வந்தது.

தமிழ் மொழியில் திருக் கோவையார், தஞ்சைவாணன் கோவை, பாண்டிக் கோவை, வெங்கைக் கோவை, கோடீச்சரக் கோவை, சீர்காழிக் கோவை முதலாகப் பல்வேறு கோவைகள் உள்ளன.

கோவை நூல்கள் கடவுளர், அரசர், சிற்றரசர், பெருமக்கள் போன்றவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இவர்களின் ஆட்சிக்குட்பட்ட நாட்டில் களவித் தலைவன் தலைவியரது ஒழுக்கம் நடைபெறுவதாகப் பாடப் பெறும்.

இக் கோவையின் பாட்டுடைத் தலைவன் சங்கரமூர்த்தி என்னும் குறுநில மன்னன் ஆவான். இக்கோவையின் ஒவ்வொரு செய்யுளிலும் மூன்றாமடியின் நான்கு, ஐந்தாம் சீர்களில் "சங்கரமூர்த்தி" என்று பாட்டுடைத் தலைவனின் பெயர் கூறப்

பட்டிருக்கிறது. இங்ஙனம் பாட்டுடைத் தலைவனின் பெயரை இடம் மாற்றாது அமைத்திருப்பது இந் நூலின் சிறப்பாகும்.

பிற கோவைகளைப் போலவே இக் கோவையிலும் கிளவித் தொகையும் கிளவிகளும் நிரல்பட நின்று பாடல்கள் செவ்வையாக அமைந்துள்ளன. கிளவிகளின் பெயர்கள், நம்பியகப் பொருள் நூற் பாக்களில் உள்ள சொற்றொடராகவே குறிக்கப் பட்டுள்ளன..

இக் கோவையில் பாட்டுடைத் தலைவனின் ஆட்சி, கொடை, வீரம், கல்வி முதலாயின ஆங்காங்கே குறிக்கப்பட்டுள்ளன. மற்றும் உவமை, உருவகம், சிலேடை, பின்வருநிலை, மடக்கு, நிரனிறை, தொனி முதலான அணிகள் அமைந்துள்ளன. குறிப்பு மொழிகளும் கையாளப் பட்டுள்ளன.

## இக்கோவையின் காலம்

இக் கோவையின் பாட்டுடைத் தலைவனான சங்கர மூர்த்தியின் காலம் புலப்படவில்லை. இந்நூலாசிரியர் இன்னார் என்றும் தெரியவில்லை.ஆயினும் இக்கோவையின் 19-ஆம் செய்யுளில் "நன்னூல் வழங்கிய நானிலத்தே கற்ற நாவலர் தாம் சின்னூலும் உண்டு என்று செப்புதல் போன்றன" என வரும் தொடர்களில் சின்னூல் என்பது குறிக்கப்பட்டிருக்கிறது. சின்னூல் என்பது பெஸ்கி என்னும் வீரமாமுனிவரால் எழுதப் பெற்ற தொன்னூல் விளக்கமாகும். இந்நூல் 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதில் செய்யப் பெற்றதாகும். எனவே இக் கோவை 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதிக்குப் பிறகு செய்யப் பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

## பாட்டுடைத் தலைவன்

வரலாறு: இவன் கங்கைக் குலத்தில் பிறந்தவன். அக் குலத்தார்க்கு விளக்குப் போன்றவன் (செய்யுள் 1). திருநெல் வேலியை அடுத்துள்ளதும் தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ளதுமான குடநாட்டின் நல்லூர் என்ற ஊரில் வாழ்ந்-தவன் (5,6,11,35). மனு நீதிப்படி அரசாண்டவன் (47). குவளைப் பூ மாலை அணிந்தவன் (24). முத்து மாலையும் அணிந்தவன் (217). மேழிக் கொடியை உடையவன் (241).

சிறப்பு: வாய்மை தவறாதவன் (222). தமிழை ஆராய்ந்தவன் (39, 87). வள்ளுவர் சொன்ன முப்பாலை ஆராய்ந்தவன் (308). அபிராமன், அநபாயன் முதலிய சிறப்புப் பெயர்களை உடையவன்(110, 188).

கொடை: நாவலர்க்கு ஐந்தரு போன்றவன் (20). இரு நிதியமும் புலவோர்க்கு ஈந்தவன் (248). புந்தி கற்கு முன்னே கொடை கற்றவன் (282).

வீரம்: பகைவர்க்கு இடியேறு போன்றவன் (280). துன்னார் துடிக்க மோலியும் தூள்பட வில் வாங்கியவன் (269). மூதணங்கு ஆட சமர் ஆடியவன் (68).

சமயம்: இவன் பெயரே இவனைச் சைவன் என அறிவிக்கும். முப்பார்வை பெற்றவனைப் போற்றும் (4), கொன்றை முடிச் சிவனைத் தொழும் (242), நெல்லை மூர்த்தியைப் போற்றும் (287) என்ற தொடர்களாலும் இவன் சிவபெருமானிடத்துப் பேரன்பு பூண்டவன் என அறிய இயலும். மற்றும் குமரனடி போற்றும் (46); ஆட்டிலேறி பொற்றாள் போற்றும் (279) என்ற தொடர்களால் முருக பக்தியும் உடையவன் என்பது தெரிகிறது. இன்னும் முத்திரை மூர்த்தி அடி போற்றும் (33), குருகை ........... குருகை மறவாத என்ற தொடர்களால் நம்மாழ்வாரிடமும் பக்தி கொண்டவன் என்பது தெரிகிறது இதனால் இவன் சமயக் காழ்ப்பற்ற பொது நோக்குடையவன் என அறியலாம்.

## திருமாலின் அவதாரம்

பொதுவாக அரசர்களைத் திருமாலின் அவதாரமாகக் கூறுவது வழக்கு. இதனை யுட்கொண்டு சங்கர மூர்த்தியும் திருமாலின் அவதாரமானவனே என இக்கோவையின் நூலாசிரியர், திருமால், இராமன், கண்ணன் ஆகியோரின் வரலாறுகளை இவன் மேல் ஏற்றிக் கூறியுள்ளார். கராம் கவரக் கரி காத்தவன் (32), மாவலிபால் மூவடி மண் வாங்கியவன் (49), கம்சனது யானையைக் கொன்றவன் (61), ஆலிலையில் துயின்றவன் (93), பேயின் முலைப்பால் பருகியவன் (116), இராவணனைக் கொன்றவன் (239) ஈரடியால் தரணியை

அளந்தவன் (225), ஐவர்க்குத் தூது சென்றவன் (272) என வருவன காண்க.

## அணிகள்

இக் கோவையில் 19, 69, 93, 212, 302 முதலிய பல செய்யுட்களில் உவமை யணியும்; 55, 57, 80, 204, 245 முதலிய செய்யுட்களில் உருவக அணியும்; 9, 106, 134, 181, முதலிய செய்யுட்களில் சிலேடை அணியும்; 67, 107, 150, 156 முதலிய செய்யுட்களில் பின்வருநிலை யணியும்; 96, 118, 142, 146, 208 முதலிய பல செய்யுட்களில் மடக்கணியும்; 54, 59-ஆம் செய்யுட்களில் நிரனிறை அணியும்; 8, 46, 78, 105, 186 முதலிய செய்யுட்களில் தொனியலங்காரமும் அமைந்துள்ளன.

## உவமை

வேழம் தனை அணைக்க மற்று ஒப்பு ஆனை கொண்டு எய்தும்வாறே தலைவியைப் பெறுதற்கு உயிர்ப் பாங்கியின் துணை கொள்ள வேண்டும் (69). பொன்னால் அலது மிடி தவிராது, மழை தன்னால் அலது கோடை தணியாது அது போலத் தோழியால் அலது தலைவன் துயர் தீராது (93). பூமியை ஆதிவராகம் எடுத்து எழும் நீர்மையைப் போல பொருநை யாற்றில் மூழ்கிய தலைவியைத் தலைவன் எடுத்துக் கொண்டு எழுந்தான் (302).

## உருவகம்

தலைவியின் கண்ணாகிய வண்டும் தலைவனின் கண்ணாகிய தாமரையும் இணைந்து நெஞ்சம் குலாய பொருளை அறிவித்தன (80). கண்ணீராகிய முத்தும் கைவளையலாகிய சங்கும் உயிர்ப்பாகிய அலைகளும் அகுமாகிய தீவும் மச்சமாகிய மீனும் தாங்கிக் கொண்டு காமமாகிய படகு மிதக்கின்றது(245).

## சிலேடை

134ஆம் செய்யுளில் தலைவிக்கும் பொருநை ஆற்றுக்கும், 181ஆம் செய்யுளில் தலைவிக்கும் நெல்லை நகர்க்கும் சிலேடை கூறப்பட்டுள்ளன.

## பின்வரு நிலையணி

67ஆம் செய்யுளில் ஆம்பல் என்னும் சொல் மூங்கில், நீர் பல, வெற்றி, யானை என்ற பொருள்களில் நான்கு முறை வந்துள்ளது. 107ஆம் செய்யுளில் நீலம் என்ற சொல் நீல நிறம், நீலப்பூ, நீலமணி, கருநிறம், பனைமரம் என்ற பொருள்களில் ஐந்து முறை வந்துள்ளது. 156ஆம் செய்யுளில் வளை என்ற சொல் சூழ்ந்த, வளைந்த, சுற்றிக் கொள்கிற, சங்கு, நிலம், வளையல் என்ற பொருள்களில் ஆறுமுறை வந்துள்ளது.

## மடக்கணி

கானவரைக் கான வரை (96), இனியார் இனியார் இனி யார் (146), வேண்டலை வேண்டலை (208), மறியார் மறியார் (231), சுரி முகமே சுரி முகமே பெண்ணையே பெண்ணையே (254), புளினமும் புளிளனமுமே (291) என்பனபோல வரும் மடக்குகள் இக்கோவையில் மல்கிக் கிடக்கின்றன.

## தொனி அலங்காரம்

(அ) பெயர், வினை, இடை, உரி(8), திணை, பால், இடம், பொழுது, வினா, செப்பு, மரபு, வழு (78), அல்வழி, வேற்றுமை (188), எழுவாய், பயனிலை (222) என்ற இலக்கணக் குறியீட்டுச் சொற்களும்,

(ஆ) நன்னூல், அகப்பொருள், புறம், காரிகை, அலங் காரம் (105) என்ற இலக்கண நூற் பெயர்களும்,

(இ) யாழ்ப்பாணம், ஈழம் (264) என்ற ஊர்ப் பெயர் களும்,

(ஈ) புண்டரீகம், முளரி, தாமரை (186) என்ற மலர்ப் பெயர்களும்,

(உ) மகரம், தனு, மீனம், கும்பம், கற்கடகம், கன்னி, சிங்கம் (46) என்ற ராசிகளின் பெயர்களும் தொனிப் பொருளில் அமையுமாறு கையாளப் பட்டிருக்கின்றன.

## குறிப்பு மொழி

நினைத்த சொல்லை வெளிப்படையாகக் கூறாமல் குறிப்பு மொழியால் மறைத்துக் கூறும் திறம் 195, 300ஆம் செய்யுட்களில்

காணப்படுகிறது. "குடை காட்டும் தண் மதியன் இடை நாட்டும் கொடுங்கணையைக் கடை காட்டும் பின் பெயர் ஏற்றது ஏற்ற வில் காளி" (195) என்ற பகுதியில் "மன் மதன்" என்பது குடை காட்டும் தண் மதியன் என்ற குறிப்பாலும், "மா"என்பது இடை நாட்டும் கொடுங் கணை என்ற குறிப்பாலும், "அரிமா" (சிங்கம்) என்பது கணையைக் கடை காட்டும் பின் பெயர் ஏற்றது என்ற குறிப்பாலும் கூறப்பட்டிருக்கிறது. தோழி வெறியாடலை மறுத்தாள். அப்போது "வெறியாடல் குற்றமும் இழிவும் உடைய தென்றா மறுத்தாய்" என்று செவிலி வினவுகிறாள். இதனை இவ்வாறு வெளிப்படையாகக் கூறாமல் 300-ஆவது செய்யுளில் "தார் கொண்ட பேரும், சமண் போக்கிச் சைவம் தரப் பிறந்தான் ஊர் கொண்ட பேரும் உடைய தென்றோ.............. வெறி ஆடல் மறுப்பது" என்று குறிப்பு மொழியால் கூறப்பட்டிருக்கிறது. தார் கொண்ட பேர் என்பது மாலை. மாலை என்ற சொல் குற்றம் என்ற பொருளும் தரும். சமண் போக்கி சைவம் தரப் பிறந்தான் என்பது சம்பந்தர். அவரது ஊர் கொண்ட பேர் என்பது சீர்காழி. சீர்காழியின் மறு பெயர் கொச்சை வயம். கொச்சை என்பது இழிவு என்ற பொருளும் தரும்.

## புனைவும் நயமும்

"தலைவியின் நகிலுக்குத் தென்னங் குரும்பையும் இளநீரும் ஒவ்வா" என்று தலைவன் புகழ நினைத்தான். இச் செய்தியைப் புலவர் புனைந்து கூறும் திறம் பாராட்டத் தக்கதாக இருக்கிறது. அதாவது தலைவியின் கொங்கைக்கு தென்னங் குரும்பை ஒவ்வவில்லை. பின்பு சற்றுப் பெருத்து இள நீராகியும் ஒவ்வவில்லை. அது மேலும் முதிர்ந்து வந்தது. ஆனால் முதிர்ந்த பின் அதன் அடாத செயலுக்காக அதன் தோலை உரித்துக் கடை வீதியில் விற்றார்கள். அதனை வாங்கினவர்கள் அதை உடைத்தார்கள் என்று ஆசிரியர் புனைந்து கூறுகிறார் (135).

"தலைவியின் முகம் பதுமம், அவளது கழுத்து சங்கு இந்த இரு நிதிகளை நான் முயன்று பெற்றேன். இதைப் போலவே முயன்றால் அயன் (பிரமன்) வீற்றிருக்கும் பதுமமும் அவன்

தந்தையான திருமால் ஏந்தும் சங்கும் பெறுவது அருமையன்று'' என்று 17-ஆம் செய்யுளில் நயமுறக் கூறப்பட்டிருக்கிறது.

''தலைவியே!' நினது இரண்டு புருவங்களுக்கும் உவமை சொல்ல நினைத்தால் மன்மதனிடம் இரண்டு விற்களில்லை. ஆகாயத்தில் மேகம் வளைக்கும் வில்லும் ஒன்றுதான்'' என்று 37-ஆம் செய்யுளில் நயமாகக் கூறப்பட்டிருக்கிறது.

தாழை ஏந்தி வந்த தலைவன் இப்பக்கமாக என்னால் துரத்தப்பட்ட யானை வந்ததோ என்றான். இது கேட்ட தோழி ''இத்தலைவர் நாண் பூட்டிய வில் இல்லாமலேயே யானையை எய்தேன் என்கிறார். இனிமேல் நாண் பூட்டாத வானவில்லைக் கூட ஏந்துவார் போலும்'' என்று நயமாக எள்ளி நகையாடுகிறாள் (79).

இந்நூல் காலத்தால் பிற்பட்டதேனும் பண்டைக் கோவை நூல்களோடு ஒருங்கு வைத்து எண்ணிச் சுவைத்தற்கு உரிய தாகும்.

# சங்கர மூர்த்திக் கோவை

## கைக்கிளை

**காட்சி**

மின்பூத்த தாமரை காவிசெவ் வாம்பல் விரிந்தரும்பும்
பொன்பூத்த கோங்கம் பொலிந்தொரு பூங்கொடி பூவுலகின்
முன்பூத்த கங்கை குலதீபன் சங்கர மூர்த்திநல்லூர்த்
தென்பூத்த சந்த வரைக்காவி னூடு திகழ்கின்றதே. *(1)*

**ஐயம்**

பூதல மோகஞ்சப் போதகமோ செம்பொன் பூதரமோ
பாதல மோகட லோநெஞ்ச மே! வஞ்சப் பற்றலரை
மோதலங் கொண்ட பெலராமன் சங்கர மூர்த்திநல்லூர்
மாதலங் கார மனையார்க்கு வாய்த்தருள் மாதலமே. *(2)*

**துணிவு**

ஏவார் விழிக்குழல் பூவா டினபத மென்னுமிரு
பூவா கியதொரு பூமீது பூத்தன; பூங்கடுக்கை
மூவா முதல்வ னருள்வாய்ந்த சங்கர மூர்த்திநல்லூர்க்
கோவா மணியனை யார்க்கிட மேயிக் குவலயமே. *(3)*

---

1. காவி - கருங்குவளைப்பூ; சங்கரமூர்த்தி என்பவன் கங்கை குலத்தைச் சார்ந்தவன். சந்தவரை - சந்தனமரம் வளரும் மலை; காவினூடு - சோலையில் முகமும் கண்ணும் வாயும் நகிலும் கொண்டு நின்ற தலைவியின் தோற்றம், முறையே தாமரையும் காவியும் ஆம்பலும் கோங்கமும் பூத்து நின்ற பூங்கொடியாகத் தலைவனுக்குக் காட்சியளித்தது.

2. பூதலம் - பூமி; கஞ்சப்போதகம் - தாமரைப்பூ; பொற்பூதரம் - பொன் மேருமலை; பற்றலர் - பகைவர். தலைவிக்கு வாய்த்த இடம் பூதலமோ, கஞ்சப் போதகமோ, பொற்பூதரமோ, பாதலமோ, (பாற்) கடலோ என்று தலைவன் ஐயுற்றான்.

3. ஏ-அம்பு; பதம் - கால்; பூமீது - பூமிமேல்; கடுக்கை - கொன்றைப்பூ குழற்பூ வாடினதாலும், பதம் எனும் இருபூ பூமீது பூத்ததாலும் தலைவிக்கு இடம் இப்பூவுலகமே என்று தலைவன் துணிந்தான். குவலயம் - உலகம்.

### குறிப்பறிதல்

இப்பார்வைத் தெண்ணும் கடலாம் கடலிரண் டீன்றதுவும்
கப்பார்வை வேல்செங் கரத்தேந்திப் பாந்தளம் கச்சணிந்து
முப்பார்வை பெற்றவனைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்
மைப்பார்வை பெற்றபொன் பாவைமெய்ப் பார்வையில்
வாய்த்தனவே. 4

கைக்கிளை முற்றும்

## இயற்கைப் புணர்ச்சி

### இரந்து பின்நிற்றற்கு எண்ணல்

என்னிலை நின்னிலை யென்பது தேற விரந்திரந்து
பின்னிலை நின்று பெருநாணி நெஞ்சம் பிரிநிலையா
முன்னிலை கண்டு குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
மின்னிலை கொண்ட மருங்குநல் லார்கொங்கை மேவுதுமே. 5

### இரந்து பின்னிலை நிற்றல்

நகம்பார்த்து நிற்பவர் நீரம்பு போல நயனங்கள்நெஞ்
சகம்பார்த் துயிர்நிலைக் கேவிப் பராமுக மாகிநின் நீர்
முகம்பார்த் திரங்கும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சகம்பார்த்த சொல்லஞ் சுகம்பார்த் திரங்கிடச் சொல்பவரே. 6

---

4. பார் - உலகம்; பாந்தள் - பாம்பு; கச்சு - அரையில் அணிந்த கச்சை; முப்பார்வை பெற்றன் - மூன்று கண்கொண்ட சிவன்; மைப் பார்வை - கருங்கண்; பொற்பாவை - தலைவி; கடல் இரண்டு ஈன்றது என்றது, நஞ்சும் அமிர்தமும் ஆம். கப்பு ஆர்வை வேல் - கிளைவிட்ட கூரிய சூலம். தலைவியின் மெய்ப்பார்வையில் நஞ்சும் அமிர்தும் வாய்த்தன என்று தலைவன் கூறுமுகத்தான் அவளது குறிப்பை உணர்ந்தவனாகின்றான்.

5. மின்னிலை கொண்ட மருங்கு - மின்னல்போன்ற இடுப்பு.

6. நகம் - மலையாகிய நகில்; நயனங்கள் - கண்கள்; அஞ்சுகம் - கிளி. நகம் பார்த்து நிற்பவர் நீர் - முலை முகத்தைப் பார்த்துக் குனிந்து நிற்கும் தலைவியாகிய நீர்.

**முன்னிலை ஆக்கல்**

நாணமென் பூஞ்சுனை யாடீர்;நல் லாரோடு நாடிநறும்
கானமென் போதும் கொய்யீர்; நிலம்பார்த்துக் கவிழ்ந்துநிற்கும்
மோனமென் சொல்லும் [குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
ஆனமென் சொல்லு மனம்போல் நடையு மமைந்தவரே. 7

**மெய்தொட்டுப் பயிறல்**

பின்னோதி பாரச் சுமைநீங்க ளென்னும் பெயர்வினையிங்கு
என்னோதி யேங்கும் யிடையுரி யார்மெல் லியலென்றெண்ணி
முன்னோதி தாங்க நிரைகாத்த சங்கர மூர்த்திநல்லூர்
பொன்னோதி னும்மணி யோதினு மாம்பொறிப்
புள்ளினமே. 8

**பொய் பாராட்டல்**

கயலார் கருந்தடங் கண்ணிநின் மாமுகக் காந்தியைக்கண்டு
அயலாய் விலங்கென அம்புலி யாய்ப்பெய ராக்கலையாய்
முயலாய் அமம்ம குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
வியலார் விலங்கலி னும்விலங் காநிற்கும் வெண்டிங்களே. 9

---

7. நாணம் - கஸ்த்தூரி; கானம் - சோலே; மோனம் - மவுனம்; ஆனம்-கள் அவம் - அன்னம்.

8. பின் ஓதி - பின்னிவிடப்பெற்ற கூந்தல்; இடையுரியார் - இடுப்பை உடைய தலைவி; மெல்லியல் - மெல்லிய இயல்புடையவள், தலைவி. முன்னோதி தாங்க - முன்னொரு காலத்தில் ஏற்பட்ட வருத்தம் நீங்க; நிரை காத்த - பசுக் கூட்டத்தைக் காத்துக்கொடுத்த; பொன் ஓதினும் மணிஓதினும் ஆம் பொறி- பொன் போன்றதும் மணி போன்றதும் ஆகிய புள்ளிகள்; பொறிப் புள்ளினம்- புள்ளிகளையுடைய வண்டுக்கூட்டம். பெயர், வினை, இடை, உரி என்ற சொற்கள்; தொனிப்பொருளில் கையாளப்பட்டிருக்கின்றன. இது தொனி அலங்காரம்.

9. கயலார் - கயல் மீன்போன்ற; காந்தி - ஒளி; அம்புலியாய் - அம்புலி என்ற பெயருடையதாய், அழகிய புலியாய்; கலையாய்-பதினாறுகலையுடைய தாய், கலைமானுய்; முயலாய் - முயற்களங்கமுடையதாய், முய்ல் என்னும் விலங் காய். அம்புலியாய், கலையாய், முயலாய் என்பன சிலேடை; வியல் ஆர் - அகன்ற இடமுடைய; விலங்கல் - மலை.

### இடம் பெற்றுத் தழால்

விதுவேனி லான்பதி யாம்காப்போ தும்பர் மிடைந்திடலான்
மதுவேறு பூங்குழ லார்கொங்கை தோய்தற்கும் வண்கமுகின்
முதுவேழ மோங்கு குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
இதுவே யிடம்பிறர் காணாது நாம்கண் டிருக்கவுமே. 10

### வழிபாடு மறுத்தல்

அருகே யொருவர் வருந்தொறும் நாணியுள் ளஞ்சியஞ்சி
ஒருகேளு மின்றி யுனையடைந் தேன் வண் டுழுதுபம்ப
முறுகேறு பூம்பொய்கை நல்லூரன் சங்கர மூர்த்திவரைக்
குருகே! கொடிச்சிறை யாலெனைப் பார்ப்பெனக்
கொண்டணையே. 11

### இடையூறு கிளத்தல்

கலைகாட்டும் திங்கள்நன் னீரிறைப் போதில் கடலடைத்து
மலைகாட்டி னால்மலை யாதோவென் னுள்ளம் மலர்மடந்தை
முலைகாட்டும் காவித் தொடைமார்பன் சங்கர மூர்த்திநல்லூர்
இலைகாட்டும் செந்தமிழ்ச் சந்தனக் கான நெடுங்கிரிக்கே. 12

---

10. விது வேனிலான் பதியாம் கா - சந்திரனைக் குடையாகஉடைய மன மதவின் ஊராகிய சோலை, காப் போது - சோலைப்பூக்கள்; உம்பர் - வானிடத்தே; மிடைந்திடலான்-நெருங்கி இருத்தலால்; மது-தேன்; கமுகின் - பாக்குமரத்தைப் போல; வேழம் ஓங்கும் - கரும்பு உயர்ந்து வளர்ந்திருக்கின்ற.

11. உள் அஞ்சி அஞ்சி - உள்ளத்தில் மிகவும் பயந்து; கேளும் - சுற்றமும்; வண்டு உழுது பம்ப - வண்டுகள் குடைந்து பெருக்க; முருகு ஏறு - மணம் மிகுகின்ற; குருகே - அன்னமே! சிறை - சிறகு. பார்ப்பு என - குஞ்சு என்று கருதி; குருகே உனது சிறையால் என்னைப் பார்ப்பு எனக்கருதி அணைத்துக் கொள் என்றாள் தலைவி.

12. கலை காட்டும் திங்கள்-கலைமான் போன்ற களங்கமுடைய சந்திரன் இது. இது ஈண்டு முகத்தைக் குறித்தது. இறைப்போதில்-சிறிது நேரத்தில். கடல் அடைத்து-கடல்போல் பரந்த கண்ணைப் பொத்திக் கொண்டு. மலை காட்டினால் -மலை போன்ற நகில்களைக் காட்டினால்; மலையாதோ-திகைக்காதோ; சந்தனக் கான நெடுங்கிரி-சந்தனமரக் காடு நிறைந்த பொதியமலை; கடல் அடைத்து என்ற தொடரால் 'தலைவி தனது கண்ணைப் புதைத்துக் கொண்டாள்' என்று தலைவன் தனக்கு நேர்ந்த இடையூற்றைக் குறித்தான்.

### நீடு நினைந்து இரங்கல்

செப்போ தடம்பொருப் போ,மருப் போவெனச் செப்புங் கொங்கை
மைப்போது போல்விழி யீர்நெல்லை வேண்ட வளர்ந்தவனை
முப்போதும் போற்றும் குடநாடன் சங்கர [மூர்த்தி] வெற்பில்
எப்போது தந்தருள் வீர்தமி யேனுக் கிதழமுதே. 13

### மறுத்து எதிர்கோடல்

தனிதாங்கு மோநிறை நெஞ்சே! விரகந் தழைத்தவர்முன்
பனிதாங்கு மோபயி ரைக்கதிர் காயின்? பதுமச்செங்கை
முனிதாங்கு மாமுனி பின்போன சங்கர மூர்த்திநல்லூர்க்
கனிதாங்கு மோகொம்பு காலெறிந் தாலெனக் கருதுவதே. 14

### வறிதுநகை தோற்றல்

இறுவற்றி று[வோம்யா] மென்றே முலைசுமந் தேங்குமிடை
மறுவற்ற சோதி மதிமுகப் பேதை வறிதுசெய்த
முறுவற் றரளம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
கறுவற்க வேளென் றணிபூத்து வள்ளலைக் காத்ததுவே. 15

---

13. செப்பு-சிமிழ்; பொருப்பு-மலை; மருப்பு-தந்தம். சிமிழ் முதலிய இம் மூன்றும் நகிலுக்கு உவமையாகக் கூறப்படுகின்றன. நெல்லை வேண்ட வளர்ந் தவன்-நெல்லையப்பராகிய சிவபெருமான்; இதழ் அமுது-வாயில் ஊறும் அமிழ்தம். இதனை 'வாலெயிறு ஊறிய நீர்' என்று வள்ளுவர் கூறினார்.

14. நிறை-நாணம்; விரகம்-காமம்; கதிர் காயின்-சூரியவெப்பம் தாக்கினால்; பதுமம்-தாமரை; முனி-கோபம், மாமுனி-பெரிய அகத்திய முனிவர்; கால் எறிந்தால்-காற்றுவீசினால். சூரியவெப்பம் தாக்கினால் பயிர் பனியைத் தாங் காதது போலவும், காற்றுவீசினால் கிளைகள் கனியைத் தாங்காதது போலவும், காமம் மிக்க தலைவரின் முன் நானும் நாணத்தைத் தாங்கமுடியவில்லை என்றாள் தலைவி.

15. வறிது-சிறிதளவு, இறுவற்று இறுவோம்-ஒடியும்போது ஒடிந்து போ வோம்; மறுவற்ற-களங்கமற்ற; முறுவல் தரளம்-புன்னகையாகிய முத்துக்கள் அதாவது பற்கள்; கறுவற்க-வருந்தற்க, வேள்-மன்மதனை ஒத்த தலைவனே! வள்ளல்-தலைவன்.

### முறுவல் குறிப்பு உணர்தல்

உளைவாய் மதனம்புக் கஞ்சுநெஞ் சே!யஞ்ச லூதுதுளைக்
கிளைவா யிசைமென் கிளையனை யார்செங் கிடையிதழ்வாய்
முளைவாள் நகைநம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
வளைவார் கழையவன் வாங்காது தாங்கும்நம் மன்னுயிரே. 16

### முயங்குதல் உறுத்தல்

இயன்றாள் முகம்பது மம்கள மேசங் கிருநிதியோ
பயன்றா ளிதுபயன் பாக்கியத் தால்கை பயிலப்பெற்றேம்
முயன்றா லினிநம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
அயன்தா மரையு மவன்தாதை சங்கு மருமையன்றே. 17

### புணர்ச்சியின் மகிழ்தல்

நெருக்கிய கொங்கைக் கலசம் தொடாமுன்னம் நெக்குருக
உருக்கியோ ரானந்தம் தந்ததுண் டோகெண்டை யோடரிக்கண்
முருக்கிதழ் மாதர்க் கதிமோகன் சங்கர மூர்த்திநல்லூர்
மருக்கிளர் கோதை யிவள்போ லமுதன்று வான்மருந்தே. 18

---

16. உளைவாய்-வருத்தமாய், மதன்-மன்மதன், கிளைவாய் இசை-கைக்கிளை என்னும் சுரம் அமைந்த இசை, கிளை அனையார்-கிளியை ஒத்த தலைவி. கிள்ளை என்பது இடைக்குறையாய் கிளை என நின்றது. செங்கிடை-செந்நிறமான நெட்டி. வாள்நகை-ஒளிமிக்க புன்முறுவல், வார் கழையவன்-நீண்ட கரும்பை ஏந்திய காமன். கிளை அனையாரின் வாள்நகை நம் மன்னுயிரைத் தாங்கும் என முடிக்க.

17. இயன்றாள்-நடந்து வந்த தலைவி. களம்-கழுத்து. தலைவியின் முகம் பதுமநிதி; அவளது கழுத்து சங்கநிதி; இந்த இருநிதிகளையும் பெற்றுவிட்டோம். இனியும் முயன்றால் நான்முகனின் ஆசனமாகிய பதுமநிதியும், அவனது தந்தையான திருமால் ஏந்திய சங்கநிதியும் கிடைத்தற்கு அருமையுடையனவல்ல என்றான் தலைவன். அயன்-நான்முகன், அவன் தாதை-திருமால்.

18. கலசம்-குடம், கெண்டை-ஒருவகை மீன், ஓடரிக்கண்-செவ்வரி ஓடுகின்ற கண்கள், முருக்கு இதழ் - செம்முருக்கம் பூவைப் போன்ற உதடுகள்; மருக்கிளர்-நறுமணம் மிகுகின்ற, வான் மருந்து - வானவர் அருந்தும் அமிழ்தம்.

**புகழ்தல்**

நன்னூல் வழங்கிய நானிலத் தேகற்ற நாவலர்தாம்
சின்னூலு முண்டென்று செப்புதல் போன்றன தேமொழியாய்
முன்நூ லணிமறை யோர்வாழ்த்தும் சங்கர மூர்த்தி நல்லூர்ப்
பொன்நூ லுடையும்நின் மென்நூ லிடையும் பொலிவு
பெற்றே. 19

### இயற்கைப்புணர்ச்சி முற்றும்.

### வன்புறை

**அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல்**

கொன்போலு முள்ளத் ததுதெருள் பாங்கி குறிப்பறிந்திப்
பொன்போலும் மேனிக் கணிவன யாவும் புனைந்தனன்யான்
முன்போல்நன் நாவலர்க் கைந்தருச் சங்கர மூர்த்திநல்லூர்
மின்போல் நுடங்கிடை மீன்போல் மதர்விழி மெல்லியலே. 20

**பெருநயப்பு உரைத்தல்**

தொகையாய் முரலும் சுரும்பினங் காளிந்தத் தோகைசெங்கைப்
பகையாய தின்றிக் குவிந்த லராநிற்கும் பான்மையன்ன
முகையாயுந் தென்குட நாடாளி சங்கர மூர்த்திவெற்பி
னகையாயுங் காட்டுங்கொல் லோவுங்கள் வாவி நளினங்களே. 21

---

19. நன்னூல்-பவணந்தி முனிவர் செய்த இலக்கணநூல். இது சிறப்புமிக்கது. சின்னூல் - நன்னூலுக்குப்பின் எழுந்த இலக்கண நூல். இது அத்துணைச் சிறப்புடையதன்று, முன்நூல் - பூணூல், இது எதுகை நோக்கி முன் நூல் என்றாகியது, மறையோர் - அந்தணர். பொன்னூல் உடையும் மென்நூல் இளமையும் நன்னூல் வழங்கிய நானிலத்தில் சின்னூலும் உண்டு என்று செப்புதல் போன்றன என முடிக்க, நன்னூலை நோக்கச் சின்னூல் சிறப் பில்லாதது போல நூல் போன்ற மெல்லிய இடையை நோக்க உடையின் பொன்னூல் சிறப்பில்லாததாகும் எனக் கொள்க; இங்ஙனம் தலைவியின் இடையைத் தலைவன் புகழ்ந்தான்.

20. கொன் - அச்சம், தெருள் - ஆராய்ந்தறிகின்ற; பாங்கி-தோழி; ஐந்தரு- ஐந்துவகையான தேவலோக மரங்கள். அவை கற்பகம் மந்தாரம் முதலியன, நுடங்கு இடை-அசைகின்ற இடுப்பு. மதர் - செருக்கு. மெல்லியலே - தலைவியே.

21. தொகையாய்-கூட்டமாய். முரலும் - ஒலிக்கின்ற. சுரும்பு - வண்டு. தோகை - மயில் போன்ற தலைவி. பான்மை யன்ன - தன்மை போல. முகை - மொட்டு. நாடாளி - நாடாளும் மன்னன். வெற்பினகையாயும் என இயைத்து மலையினது கைகளாயும் எனப்பொருள் கொள்க. வாவி - குளம். நளினம் - தாமரை. வாவியில் உள்ள தாமரைகள் தலைவியின் கைகளுக்குப் பகையாய தோடு அன்றி குவிந்து மலரும் தன்மையால் மொட்டாகவும், மலையினது கைகளாகவும் விளங்குகின்றன எனப்பொருள் கொள்க. நயப்பு - விருப்பம். தாமரையை விடக் கை சிறப்புடையது என்று குறிப்பிட்டுத் தலைவன் தனது நயப்பை அறிவித்தான்.

### தெய்வத்திறம் பேசல்

வெம்பால தாம்பிரி வின்பால்செய் வாரெவர் மேவினரேல்
நம்பால் விசைய விதிப்பால் புணர்த்தது நம்மைக்கண்டாய்
மொய்ம்பால் நிலம்முழு துந்தாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
அம்பா லியல்விழி யான்பா லியல்மொழி யாரணங்கே. 22

### பிரியேன் என்றல்

தாங்கிலன் நீநின் றிரங்கே லுனைவிட்டுச் சற்றொருபால்
நீங்கிலன் நீங்க நினைக்கிலன் யான்நினைத் தாலுமுய்யேன்
மூங்கிலங் கானம் பகுத்தூதும் சங்கர மூர்த்திநல்லூர்க்
கோங்கிலங் காரம் முலைமுல்லை வாள்நகை கோகிலமே. 23

### பிரிந்து வருகு என்றல்

வீசுங் கழங்குய ரப்போய்நின் செங்கையின் மீண்டுவரும்
ஆசுங் குறையப் பிரிந்தேகி மீள்வ னளிபரந்து
மூசுங் குவளைத் தொடைமார்பன் சங்கர மூர்த்திநல்லூர்த்
தேசுந்து சோலைக் குயிலே கவலலுன் சிந்தனையே. 24

---

22. தெய்வம் - விதி. தெய்வத்திறம்-சேர்த்துவைத்த விதி இனிப் பிரிக்காது என்று சொல்லும் தன்மை. வெம்பாலதாம் பிரிவு - கொடிய வினைப்பட்ட பிரிவு, செய்வார் எவர் - பிரிவைச் செய்பவர் எவர்? மேவினரேல் - சேர்ந்தாரானால். விசைய - வெற்றியுடைய. விதிப்பகல் - விதியாகிய ஊழ்வினை. மொய்ம்பால் - வலிமையினால். அம்பு ஆல் இயல் விழி - அம்பும் ஆலகாலவிடமும் போன்ற கண்கள். ஆன்பால் - பசுவின் பால். ஆரணங்கே - தெய்வம் போன்ற தலைவியே.

23. தாங்கிலன்-பொறுக்கமாட்டேன், உய்யேன்-பிழைக்க மாட்டேன். மூங்கில் அங்கானம் பகுத்து ஊதும் - மூங்கிலால் செய்த குழலினால் அழகிய இசையை ஏழாகப் பகுத்து ஊதுகின்ற. கோங்கு - கோங் கரும்பு போன்ற நகில். இலங்கு ஆரம் - ஒளிவீசும் முத்துமாலை, கோகிலம் - குயில் போன்ற தலைவி.

24. பிரிந்து வருகு - பிரிந்து வருகிறேன். கழங்கு - கழற்சிக்காய். ஆசு - இடைவெளி (யாகிய சிறு நேரம்). அளி - வண்டு. மூசும் - மொய்க்கும். தொடை-மாலை. தேசு - ஒளி. உந்து - மிகுகின்ற. கவலல் - வருந்தாதே. கழற்சிக்காய் மேலே போய்த் திரும்பி வரும் இடைவெளி நேரத்திலும் குறைவாகப் பிரிந்து வருகிறேன் என்றது மிகவிரைவில் திரும்புவேன் என்பதாம்.

**இடம் அணித்து என்றல்**

பொன்னஞ் சிலம்புநும் மூர்வரி [வண்டு]போ தூதல்கேட்ப
உன்னஞ் சிலம்புமெம் ஊர்வா வியினி லணிமுரசம்
முன்னஞ் சிலம்பு மணிவாசல் சங்கர மூர்த்திநல்லூர்த்
தென்னஞ் சிலம்பின் சுனைக்காவி மைவிழித் தேமொழியே. 25

வன்புறை முற்றும்

## தெளிவு

**தெளிவு**

மிகுந்தன்பு வைத்தமெய் யார்பிரி யேனென்ற வீறுகுன்றப்
புகுந்தங் கினிமை யறாக்கைய ராகச்செம் பொன்பொழியும்
முகுந்த னனைய குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
தகுந்தம் தகைமைப்பொய் யார்நெஞ்ச மேவிடு சஞ்சலமே. 26

தெளிவு முற்றும்

## பிரிவுழி மகிழ்ச்சி

**செல்லும் கிழத்தி செலவுகண்டு உளத்தொடு சொல்லல்**

கனம்போலுங் கோதைமுன் காட்டமை நாட்டம்பின் காட்டமயில்
இனம்போலுஞ் சாயல்கொண் டாயத்தை நாடி இராவணனை
முனம்போரில் வெல்லச் சிலைவாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
அனம்போல் நடக்கின் றவர்நெஞ்ச மேநம தாருயிரே. 27

---

25. பொன்னம் சிலம்பு-பொன்மயமானமலை. போது-மலர். உன்னம் சிலம்பு-விரிச்சி ஒலி செய்யும். வாவியினில் - குளத்தில். தென்னம் சிலம்பு - பொதிய மலை. தலைவியே நும்ஊரில் வாழும் வண்டு எம்மூர் வாவியினில் பூவில் ஊதும் ஓசையைக் கேட்போம் என்றதால் இருவர் வாழிடமும் அணிமையில் உள்ளன என்று தலைவன் குறிப்பிடுகிறான்.

26. மெய்யார் - உண்மை தவறாத தலைவர். வீறு - பெருமை. முகுந்தன் - திருமால். சஞ்சலம் - வருத்தம்.

27. கிழத்தி - தலைவி, கனம் - மேகம், கோதை - கூந்தல், நாட்டம் - கண். ஆயம் - தோழியர் கூட்டம். சிலைவாங்கும் - வில்லை வளைக்கும். அரசர்களைத் திருமாலாகப் பாவித்துப் பாடுவது வழக்கம். அதனால் இராவணனை வெல்ல வில்லைவளைக்கும் சங்கரமூர்த்தி என்றார் புலவர். பின்வரும் பாடல்களிலும் இதைக் காணலாம்.

### பாங்கனொடு சொல்லல்

பொன்பார்த்து நாண யெனைநோக்கிக் கூட்டம் புகாவிடினும்
துன்பார்த்து மென்றுன்னித் தேர்வல வாதுந் துமியெலும்பை
முன்பார்த்துத் தம்பியைப் பின்பார்த்த சங்கர மூர்த்திநல்லூர்
மின்பார்த்த தம்மசெந் தேன்நோக்கும் மான்நோக்கும்
மீன்நோக்குமே. 28

### பிரிவுழிக் கலங்கல்

### ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோ என்றல்

சூட்டிய கோதைமின் னாராய வெள்ளம் துவன்றியூஞ்சல்
ஆட்டிய நாயக மின்னனை யார்மன மம்பிலம்பு
பூட்டிய செம்பொன் சிலையாளி சங்கர மூர்த்திநல்லூர்க்
கூட்டிய மாயமும் மெய்யோபொய் யோவென்கொல்
கூறுவதே. 29

### வாயில் பெற்று உய்தல்

இகத்துறை வார்க்கும் கிடையா தனபெற் றளிதுவந்தோம்
சுகத்துற வாயினி நெஞ்சேயஞ் சேலிந்தத் தோகை
பார்வை
முகத்துறை கண்டே தருங்கொடை சங்கர மூர்த்திவெற்பின்
அகத்துறை பாங்கி புறத்துறைந் தாளென் றறிவித்ததே. 30

---

28. பொன் - திருமகள். துன்பு ஆர்த்தும் - துன்பம் செய்புமோ. உன்னி - நினைத்து. தேர் வலவா - தேர்ப்பாகனே. 'துந்துமி எலும்பை முன்பார்த்துத் தம்பியைப் பின்பார்த்தது' என்பது இராமாயண வரலாறு. இராமன் துந்துமியின் எலும்பைக் காலால் எற்றும்படித் தனது தம்பியான இலக்குவனிடம் கூறிய வரலாறு இது. மின் பார்த்தது - மின்னலை ஒத்த தலைவி பார்த்த பார்வை யானது. தேன் நோக்கும் மான் நோக்கும் மீன் நோக்குமே - தேன்போல் இனியதும், மான்போல் மருண்டதும், மீன்போல் காக்கும் தன்மையதும் ஆகிய பார்வையாகும்.

29. கோதை-மாலை, மின்னார் ஆயம்-மின்னல் போன்ற தோழியர் கூட்டம். துவன்றி-நெருங்கி. நாயக மின்னனையார்-தலைவி, அம்பில் அம்பு பூட்டிய-கடல் நீரில் அம்பு தொடுத்த. சிலையாளி-இராமன். மின்னனையார் தனது மனத்தை நம்மிடம் கூட்டிய மாயம் மெய்யோ பொய்யோ என இயைக்க.

30. இகம்-இவ்வுலகம், தோகை-மயில் போன்ற தலைவி, அகத்துறை பாங்கி-மனத்தில் ஒன்றிவாழும் தோழி, புறத்துறைந்தாள்-நம் பக்கத்தவள் ஆயினாள். அதாவது நமக்கு உற்றுழி உதவுவாள் என்பதாம்.

### பண்பு பாராட்டல்

அல்லையொவ் வாக்குழல் செல்லையொவ் வாபின்
அறலையொவ்வா
வல்லையொவ் வாமுலை செப்பையொவ் வாபின்
மலையையொவ்வா
முல்லையொவ் வாநகை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
வில்லையொவ் வாநுதல் வேலையொவ் வாவிழி
மெல்லியற்கே. 31

### பயந்தோர்ப் பழிச்சல்

வடக்கும் குணதிசை யும்பரிப் பாரென வாழி;கற்பம்
கடக்கும் பிரமன்நன் நாள்பெற்று வாழி; கராங்கவர
முடக்கும் தடக்கைக் கரிகாத்த் சங்கர மூர்த்திநல்லூர்த்
தடக்குங் குமமுலைத் தாரார் குழலியைத் தந்தவரே. 32

### கண்படை பெறாது கங்குல் நோதல்

நித்திரை போக்கிப்பின் னேபோன தென்நெஞ்சு நீண்டதந்தோ
மைத்திரை போல்கங்கு லென்செய்தும் யாம்;திரு
வாய்மொழிசொல்
முத்திரை மூர்த்தி யடிபோற்றும் சங்கர மூர்த்திநல்லூர்
நத்திரை நீர்பழ னகுட நாட்டிள நங்கைபின்னே. 33

பிரிவுழிக் கலங்கல் முற்றும்

---

31. அல்-இருட்டு, குழல்-கூந்தல், செல்-மேகம், அறல்-அறல்மணல், வல்-சூதாடு காய், செப்பு-சிமிழ், நகை-பல், நுதல்-நெற்றி, மெல்லியல்-மென்மையான இயல்புடைய தலைவி. ஈண்டுத் தலைவியின் கூந்தல் இருட்டையும் மேகத்தையும் அறல் மணலையும் ஒவ்வாது என்றும், நகில் சூதாடுகாயையும் சிமிழையும் மலையையும் ஒவ்வாது என்றும், பற்கள் முல்லையை ஒவ்வா என்றும், நெற்றி வில்லை ஒவ்வாது என்றும், விழி வேலை ஒவ்வா என்றும் தலைவியின் பண்பைத் தலைவன் பாராட்டினான்.

32. வடக்குத்திசை பரிப்பான்-குபேரன், குணதிசை பரிப்பான்-இந்திரன், கற்பம்-பலயுகம் சேர்ந்த நீண்ட காலம், பிரமன் நன்நாள்-நான்முகனின் ஆயுட்காலம், கராம்-முதலை, தடக்கை-நீண்ட பெரிய துதிக்கை, கரி-யானை, தார்-மாலை, குழலி-கூந்தலையுடைய தலைவி. ஈண்டுத் தலைவியைப் பெற்றுக் கொடுத்த தாய்தந்தையர் குபேரனைப் போலவும் இந்திரனைப் போலவும் பிரமனுக்கு உரிய ஆயுட்காலம் வரை வாழ்க எனத் தலைவன் வாழ்த்தினான் பழிச்சல்-பாராட்டல்.

33. நீண்டது-காலம் தாமதித்தது, மைத்திரை-கருமையான திரை, கங்குல்-இரவுக்காலம், முத்திரை மூர்த்தி-நம்மாழ்வார், நத்து இரை நீர் பழனம்-சங்குகள் ஒலிக்கின்ற நீர் நிறைந்த வயல்.

## இடந்தலைப்பாடு

### தந்த தெய்வம் தரும் எனச் சேறல்

அன்னந் தருநடை யும்பிடி யானை யடிநடையும்
பன்னந் தரும்பதத் தால்தரும் கோமளப் பைந்தொடியை
முன்னந் தருந்தெய்வம் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
இன்னந் தரும்நெஞ்ச மேயெழு வாயங் கென்னுடனே. 34

### முந்துறக் காண்டல்

செப்புடைக் கொங்கைமுன் நிற்கின்ற வாபசுந்
தேனிரைக்கும்
கொப்புடைச் சோலை யிடைத்தேன்பைந் தாழையில்
கூன்கவிபோய்
முப்புடைக் காய்சிந்து நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
ஒப்புடைத் தாக மயிலியல் நாட வொருதனியே. 35

### முயங்கல்

இயங்கிய தென்றலங் காவகத் தேமின் னிடைசுமப்பத்
தயங்கிய சொர்க்க மிரண்டினும் சேரத் தமியனொடு
முயங்கிய தால்நம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
வயங்கிழை சேரின்பம் பேரின்பம் சிற்றின்பம் மற்றின்பமே. 36

---

34. தெய்வம்-ஊழ்வினை, அன்னம்-அன்னப்பறவை, பிடியானை-பெண் யானை, பன்வம் தரும் பதம்-சாதிபத்திரி போல் சிவந்த பாதம், கோமளம்-, இளையாள், பைந்தொடி-பசிய வளையலை அணிந்த தலைவி.

35. செப்புடைக் கொங்கை-சிமிழ் போன்ற நகிலை உடைய தலைவி, நிற்கின்றனவா-நிற்பது என்ன ஆச்சரியம், தேன்-வண்டுகள்.

36. இயங்கிய - அசைந்து வந்த, காவகத்தே - சோலையில், மின் இடை - மின்னல் போன்ற இடுப்பு. சொற்கம் இரண்டு - சொற்கம் போல் இன்பம் தருகிற இரண்டு நகில்கள், முயங்கியது - அணைத்துக் கொண்டது. வயங்கு இழை - விளங்குகிற அணிகளைப் புனைந்த தலைவி, தென்றல் போன்ற தலைவி, இடுப்பு சுமக்கின்ற நகிலாகிய இரண்டு சுவர்க்கம் சேரும்படி முயங்கினாள், அத்தலைவியைச் சேரும் இன்பமே பேரின்பம், மற்ற இன்பமெல்லாம் சிற்றின்பமே என்றான் தலைவன்.

### புகழ்தல்

மாதண் தமிழ்மொழி! நின்வார் புருவத்தை மால்மதனக்
கோதண்ட மென்ப திரண்டில்லை யேபொற் குவடுசுற்றி
மூதண்ட கூடந் தொடுங்கீர்த்தி சங்கர மூர்த்திநல்லூர்
வேதண்டம் மீது வருமா முகிலிட்ட வில்லுமொன்றே. 37

### உடன்புணர் ஆயத்து உய்த்தல்

கண்ணைப் புடைசெலுத் தித்தமி யேனுட் கருத்தையழல்
வெண்ணைப் படியுருக் கித்தந்த நீர்சென்று மேவுகமா
மொண்ணைப் பணைமரு தம்சாய்த்த சங்கர மூர்த்திநல்லூர்ப்
பண்ணைப் பசுங்கிளி யார்வண்ட லாடல் பயிலிடத்தே. 38

இடந்தலைப்பாடு முற்றும்

## பாங்கற் கூட்டம்

### தலைவன் பாங்கனைச் சார்தல்

போதியல் மாலைக் குழல்மாது கூட்டம் பொருத்தமலர்
ஆதியன் மாமறை வேதியன் போல்நமக் காருயிராம்
மூதியல் மேன்மைத் தமிழ்தேரும் சங்கர மூர்த்திவெற்பில்
வேதியன் பாங்கனுண் டேநெஞ்ச மேயஞ்சல்
வேறெண்ணியே. 39

---

37. தமிழ்மொழி - தமிழ்மொழிபோல் இனிய தலைவியே! வார் - நீண்ட மால் மதனன் - மயக்கும் மன்மதன், கோதண்டம் - வில், குவடு - மலை உச்சி, மூது - பழைய, வேதண்டம் - மலை. முகில் இட்ட வில் - மேகம் வளைத்த வானவில், தலைவியே நினது இரண்டு புருவத்துக்கு உவமை கூற வேண்டின் கோதண்டம் என்ற வில்லும் இரண்டில்லை; மேகம் வளைத்த வானவில்லும் ஒன்றே உள்ளது என்று தலைவன் புகழ்ந்தான்.

38. மேவுக - பொருந்துக, மா - பெரிய, மொண்ணை - மொட்டையான, பணை - கிளை. பண்ணை - விளையாட்டுக் கூட்டம், வண்டல் - ஒரு வகையான மகளிர் விளையாட்டு. வண்டல் பயில் இடத்தே நீர் சென்று மேவுக என இயைக்க.

39. மாது கூட்டம் பொருத்த - தலைவியோடு கூட்டி வைப்பதற்கு, மலர் ஆதியன் மாமறை வேதியன் - தாமரையில் இருக்கும் முதல்வனும் வேதம் ஓதும் வேதனும் ஆகிய நான்முகன், மூது - பழமை; தேரும் - ஆராய்கின்ற. வேதியன் பாங்கன் - பார்ப்பனப் பாங்கன்.

### பாங்கன் தலைவனை உற்றது வினாதல்

தென்நூல் இயலறிந் தோவட நூலின் திறந்தெரிந்தோ
வின்னூல் நரம்பி னிசைபயின் றோவண்ண லே!புவிக்குள்
முன்நூல் முறைதிறம் பாவாய்மைச் சங்கர மூர்த்திநல்லூர்
வின்னூல் மரபுகண் டோதிரு மேனி மெலிகின்றதே. 40

### தலைவன் உற்றது உரைத்தல்

இப்பாடல் கிடைக்கவில்லை 41

### கற்றறி பாங்கன் கழறல்

ஓதித் தெளிந்தறிந் தாய்கலை யாவு முளங்கலங்காய்
ஆதித்த னார்தெற் கெழினும்வெண் கூன்சங் கறைதிரைமேல்
மோதித் தவழும் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
[நீதித் தவறினை யால்தகு மோசொல் நினக்கிதுவே.] 42

### கழற்று எதிர் மறுத்தல்

[செய்யலை சேல்கண்ணும் செங்கனி வாயும் சிறுமருங்கும்
மையலைச் செய்யும்மைக் கூந்தலும் வாய்த்த மடமங்கையை
மொய்யலைக் காயல் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்த்]
தையலைக் காணினும் சாற்றுவை யோவென்முன்
சாற்றியதே. 43

---

40. தென்நூல் – தமிழ்நூல், வில்நூல் நரம்பு – யாழில் கட்டிய நூல்போன்ற நரம்பு. முன்நூல் – மனுநீதி, வில்நூல் மரபு - விற்பயிற்சி. அண்ணலே! தென் நூல் அறிந்தோ வடநூல் தெரிந்தோ இசை பயின்றோ வில்நூல் மரபு கண்டோ இவற்றுள் எதனால் உன் உடம்பு இளைத்தது என்று பாங்கன் வினாவினான்.

42. ஆதித்தனார் – சூரியன், கூன் சங்கு – வளைந்த சங்கு, அறை - ஒலிக்கின்ற, திரைமேல் – அலைகளின்மேல்.

43. செய் அலை - வயலில் திரிகிற. மருங்கு - இடுப்பு; மைக்கூந்தல் - மேகம் போன்ற கூந்தல். மொய் - திரண்ட, காயல் - குளம்.

### கிழவோற் பழித்தல்

விடங்கலந் தாலன்ன கண்ணிரண் டாலொரு மெல்லியலென்
திடங்கலங் காநிற்கச் செய்ததென் றாயினித் தெண்திரைசூழ்
முடங்கலங் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா!
மடங்கலஞ் சாநிற்கு மோ?ஐய கோபுள்ளி
மானைக்கண்டே. 44

### கிழவோன் வேட்கை தாங்கற்கு அருமை சாற்றல்

பொன்தா துகுமென் மலர்க்கூந்தல் வேட்கையின்
பொங்குவெள்ளம்
வற்றா திழுத்திட வன்மீனொப் பானதுன் வார்த்தை
யென்னால்
முற்றாது நண்ப! குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
புற்றா திகழ்ந்தனை யேபற்ற லாரெனப் பற்றிகழ்ந்தே. 45

### பாங்கன் தன்மனத்து அழுங்கல்

மின்னிக் குழைமக ரம்தனு மீனம் வெருட்டுமென்றும்
மன்னிக்கும் பங்கற் கடகம் குலாவி மருட்டுமென்றும்
முன்னிக் குமர னடிபோற்றும் சங்கர மூர்த்திநல்லூர்க்
கன்னிக்குச் சிங்கந் தளர்ந்தாலென் நாம்சொல்லும்
கட்டுரையே. 46

---

44. மெல்லியல் - மெல்லிய இயல்புடைய தலைவி. திடம் - தைர்யம். கலங்கா நிற்க - கலங்கும்படி, தெண்திரை - தெளிந்த அலை. முடங்கல் - வளைந்த, காயல் - குளம், மடங்கல் - சிங்கம். புள்ளிமானைக் கண்டு சிங்கம் அஞ்சுமா? மெல்லியல்புடையாள் உன்னைக் கலங்கச் செய்தாள் என்கிறாய் இது பொருந்துமோ என்று பாங்கன் தலைவனைப் பழித்தான்.

45. தாது - மகரந்தம்; உகு - சிந்துகிற. பற்றலார் - பகைவர். ''தலைவி மேல் எழும் வேட்கை வெள்ளமாய்ப் பெருகுகிறது. நீ கூறும் வார்த்தைகள் அந்த வெள்ளத்தை எதிர்க்கும் மீன் போன்றது. அதாவது பெரு வெள்ளத்தை மீன் எதிர்க்க முடியாதது போல என் வேட்கை முன் உன் வார்த்தை எடுபடாது'' என்றான் தலைவன்.

46. குழை மகரம் - மகர மீன் வடிவில் செய்த காதணி, தனு மீனம் - விற்போன்ற புருவத்தை அடுத்த மீன் போன்ற கண்கள். வெருட்டும் - அச்சுறுத்தும். கும்பம் - குடம் போன்ற நகில், கற்கடகம் - வைரக்கல் பதித்த கடகம் என்ற அணி. கன்னிக்கு - தலைவிக்கு, சிங்கம் - தலைவன். ஈண்டு மகரம் தனு மீனம் கும்பம் கற்கடகம் கன்னி சிம்மம் என்ற ராசிகளின் பெயர் தொனிக்கப்பாடியிருப்பது ஓர் நயம். இதனைத் தொனியலங்காரம் என்ப. ''தலைவனே தளர்ந்தால் நாம் சொல்லும் வார்த்தை என்ன இருக்கிறது?'' என்றான் பாங்கன்.

### தலைவனோடு அழுங்கல்

நொந்துகந் தாயில்லை யென்வார்த்தை யுன்புந்தி நோக்கிலுந்து
கந்துகம் போன்றதென் செய்வன்மன் னாயிக் கலியுகத்தின்
முந்துகங் காட்டும் மனுநீதி சங்கர மூர்த்திநல்லூர்க்
கொந்துகந் தேறிச் சுரும்பார்க்கும் சோலைக் குயில்பொருட்டே. 47

### எவ்விடத்து எவ்வியற்று என்றல்

மதுவோசை விண்டுவண் டுண்டாடும் வாரிச மாளிகையென்
பதுவோவெண் பாற்கட லோயிறை வாநல் லறிவறிந்த
முதுவோர்சொல் தேரும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
எதுவோ தலமிய லேதோசொல் லாய்மெல் லியல்தனக்கே. 48

### அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்று என்றல்

காவடி வாம்குழல் ஏவடி வாம்கண்கள் கஞ்சமலர்
மாவடி வாம்கவின் மாஞ்சோலை யேயிடம் மாவலிபால்
மூவடி வாங்கிய நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
பூவடி வாங்கு மிடையோ திமநடை பொற்கொடிக்கே. 49

---

47. புந்தி - அறிவு, உந்து - வீசுகிற. கந்துகம் - பந்து. முந்து உகம் - முதல் யுகமாகிய கிரேதாயுகம். கொந்து - பூங்கொத்து, சுரும்பு - வண்டு, என் சொல்லை உன் அறிவிற் கொள்ளவில்லை; வீசிய பந்து திரும்பித் தன்விடமே வருவதுபோல என் சொல்லும் என்னிடமே திரும்பியது; நான் என் செய்வேன் என்று பாங்கன் வருந்தினான். அழுங்கல் - வருந்துதல்.

48. மது - தேன். ஓசை விண்டு - ஒலித்து. வாரிசம் - தாமரை. இறைவா- தலைவனே. தேரும் - தெளியும். மெல்லியல் - தலைவி. தலம் - இடம். "தலைவிக்கு இடம் வாரிசமாளிகை என்பதுவோ, பாற்கடலோ எது? இயல்பு எது? சொல்" என்றான் பாங்கன்.

49. கா-சோலை, குழல் - கூந்தல், ஏ-அம்பு. கஞ்சமலர் - தாமரைப்பூ. மா - மாந்தளிர். கவின் - நிறத்தழகு. வாங்கும் - வளையும். ஓதிமம் - அன்னம். பொற்கொடியாகிய தலைவிக்குக் கூந்தல் சோலை போலும். அம்பு போன்ற கண்கள் தாமரை மலர் போலும். நிறம் மாந்தளிர் போலும். கால் பூப்போலும். இடை வளையும், நடை அன்னம் போலும் என்று இயல்பு கூறினான். இடம் மாஞ்சோலை என்று இடம் கூறினான் தலைவன்.

### பாங்கன் இறைவனைத் தேற்றல்

புள்ளாருந் தண்டலை வண்டலை நாடிப் புகுந்துமலர்க்
கள்ளாருங் கூந்தலைக் கண்டுனை யான்வந்து காண்பளவும்
முள்ளாருங் கண்டல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
உள்ளாருந் துன்ப மொழிகண்டு மீள்வ னொருகணத்தே. 50

### குறிவழிச் சேறல்

தன்னா ருயிரனை யார்சூழக் காவில் தளர்மருங்கால்
மின்னா ருயிர்குன் றிடவிளை யாடுங்கொல்; மெய்வெயர்த்து
முன்னா ருயிர்த்தஞ்ச வில்வாங்குஞ் சங்கர மூர்த்திநல்லூர்
என்னா ருயிரன்ன மன்னா ருயிர்கொண ரின்னுயிரே. 51

### இறைவியைக் காண்டல்

ஒழிவே றிலைஐயந் தன்னைநெஞ் சேயி துறுதிசொல்லும்
வழிவே றிலையம் மலர்க்காவும் மிங்கிது மன்னன்சொன்ன
மொழிவே றிலைநம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சுழிவே றிலையெனு முந்திநல் லாருமத் தோகையரே. 52

### இகழ்ந்ததற்கு இரங்கல்

மின்னெறிந் தேபுகு மாலு மொப்பான்கஞ்ச வீட்டிலுறை
பொன்னறிந் தேபுகு மாலுமொத் தானிப் புணர்ப்பினைநான்
முன்னறிந் தேனெனில் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
என்னெறிந் தேனிக ழேன்[யானெ]ன் னாருயி ரேந்தலையே. 53

---

50. புள்-வண்டு. தண்டலை - சோலை. வண்டல் - மகளிர் விளையாட்டு நாடி-தேடி. கூந்தல்-கூந்தலை உடைய தலைவி. காண்பளவும்-காணும் வரை. கண்டல்-நீர் முள்ளி. கூந்தலை உடைய தலைவியைக் கண்டு வந்து உனைக் காண்பளவும் துன்பம் ஒழிக என இயைக்க.

51. உயிரனையார்-தோழிமார்கள். காவில்-சோலையில். மருங்கு-இடுப்பு. முன்னார் - பகைவர். மன்னார் - தலைவன். இன்னுயிர் என்றது தலைவியை. இன்னுயிர் காவில் விளையாடுங் கொல் என இயைக்க. குறி-குறித்துச் சொன்ன இடம். சேறல்-செல்லுதல்.

52. மன்வன்-தலைவன். சுழி-நீர்ச் சுழி. உந்தி-கொப்பூழ். தோகையர்-மயில் போலும் தலைவி.

53. கஞ்சம்-தாமரை. பொன்-திருமகள். ஏந்தல்-தலைவன். மின் எறிந்தே புகும் மால் - மின்னலை விசிக்கொண்டு மேகத்தில் செல்லும் மயக்கமுடைய இந்திரன். பொன் அறிந்தே புகும் மால் - திருமகள் என்று அறிந்து செல்கின்ற திருமால்.

### தலைவியை வியத்தல்

நீடும் தகையங்கு வந்தால் நுழையவும் நீந்தவும்தான்
நாடும் திறல்விஞ்சை யெவ்வாறு கற்றனன்; நாளும்முகில்
மூடும்தண் சோலைக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
காடும் கடலுமன் றோவஞ்சி கூந்தலும் கண்களுமே. 54

### தலைவனை வியத்தல்

கையமர் காந்தள் வரைப்புயஞ் சூட்டியிக் காரிகைக்கண்
மையமர் காவியும் சேர்த்தன ராதலின் மாற்றலர்தம்
மொய்யமர் வாங்கச் சிலைவாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
மெய்யமர் வாய்மொழி வேந்தனுஞ் சேந்தனில்
மேம்பெற்றதே. 55

### தலைவன் தனக்குத் தலைவிநிலை கூறல்

படையுண்டுண் [டுண்டு]ள முண்டமைப் பார்வைபொற்
பார்வைவஞ்சி
இடையுண்டுண் டில்லை யெனநின்ற தாலணங் கெண்ணலர்தம்
முடையுண்டுண் டாடச் சமராடுஞ் சங்கர மூர்த்திநல்லூர்ப்
புடையுண்டுண் டாடி யளிபாடுங் காவில் புரவலனே. 56

### தலைவன் சேறல்

இருகால் விரைய வெனக்கொரு கால்விஞ்சை ஈந்திலரே
ஒருகால் வளர்கம லத்தய னார்சுரும் புற்பலப்பூ

---

54. நீடும் தகை – நெடுந்தகை; அதாவது தலைவன். திறல் – ஆற்றல். விஞ்சை – வித்தை, கல்வி. முகில் - மேகம்; தலைவியின் கூந்தல் காடு போலும். கண்கள் கடல் போலும். அக்காட்டுக்குள் நுழையவும் அக்கடலை நீந்தவும். விஞ்சை எவ்வாறு கற்றான் என்று பாங்கன் வியந்தான். ஈண்டுத் தலைவியின் கூந்தலையும் கண்களையும் காடும் கடலும் போலும் என்றது தலைவியை வியத்தலாகும்.

55. கையமர் காந்தள்-கை போன்ற காந்தட்பூ. புயம்-தோள், காரிகை - தலைவி. மை யமர் காவி - கருநிறமான குவளைப் பூ. மாற்றலர் - பகைவர். மொய் அமர்-வீரர் நெருங்கிய போர். வேந்தன்-தலைவன், சேந்தன்-முருகன்.

56. படை – வேலாகிய படை. மைப் பார்வை – கரிய விழி. வஞ்சி இடை-வஞ்சிக் கொடி போன்ற இடுப்பு. அணங்கு - தலைவி. எண்ணலர் – பகைவர் முடை – புலால் நாற்றம். சமராடும் – போராடும். புடை – பக்கம். அளி - வண்டு புரவலனே – தலைவனே.

57. விஞ்சை – வித்தை. கமலத்து அயனார் – தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன். உற்பலப் பூ – நீலோற்பலப் பூ. முருகு ஆலும் வாசனை வீசும். சாயல் – குளம். குருகு – நாரை. ஆலும் – ஒலிக்கின்ற.

முருகாலுங் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
குருகாலும் சோலைக் குயிலைநெஞ் சேசென்று கூடுதற்கே. 57

### தலைவியைக் காண்டல்

கைதந்த காந்த ளலரா மலர்கொய்து கார்தந்தன்ன
நெய்தந்த கோதைமுன் நிற்கின்ற வாநெய்தல் நெக்கச்
செந்தேன்
மொய்தந்த காயல் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
மைதந்த காவகத் தூடே கிளிக்கும் மழலைதந்தே. 58

### கலவியின் மகிழ்தல்

சுகந்தாங் கியநலஞ் சொல்லற்குந் தூவிப்பைந் தோகைநின்னை
அகந்தாங் கினும்புறங் காண்டற்கும் வேண்டு மரக்கரைக்கார்
முகந்தாங்கி வென்ற குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சகந்தாங்கி நாவும் மகந்தாங்கி கோவும் தமியனுக்கே. 59

### புகழ்தல்

நெருங்கும் படியொன்றி னொன்றூ டொளித்து
நிலைகுலைந்துன்
மருங்குங் குழலுங்கண் டன்றோ மினும்கரு மஞ்சும்செந்தீ
முருங்குங் கனைகடல் மேலேவும் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பருங்குங் குமமுலை யாய்!விண்ணி னூடு படர்ந்ததுவே. 60

---

58. கை தந்த காந்தள்–கை போன்ற காந்தட் பூக்கள். அலரா மலர்-இதழ் நன்றாக விரியாத மலர், அதாவது மொக்குள். கார் தந்தன்ன – மேகம் போன்ற கோதை – கூந்தலை உடைய தலைவி. நிற்கின்றவா – நிற்பது என்ன ஆச்சரியம். நெக்க – விண்ட, மொய் தந்த காயல் – நிரம்பிய குளம். மை-மேகம். காவகம் – சோலை. கோதை காவகத்து ஊடே கிளிக்கு மழலை தந்து நிற்கின்றவா என இயைக்க.

59. தூவி – மெல்லிய இறகு. தோகை – மயில் போன்ற தலைவி. கார் முகம் – வில். சகம் – உலகம். சகந்தாங்கி – உலகைச் சுமக்கும் ஆதிசேடன். மகம் – யாகம், மகந்தாங்கி கோ – யாகத்தைக் காக்கும் இந்திரன். தலைவி தந்த நலம் சொல்லற்கு ஆதிசேடனின் ஆயிரம் நாக்கு வேண்டும்; தலைவியின் புற அழகைக் காண்டற்கு இந்திரனின் ஆயிரம் கண் வேண்டும் என்று தலைவன் கூறுகிறான்.

60. ஊடு – உள்ளே. மருங்கு – இடுப்பு, குழல் – கூந்தல், மினும் – மின்னலும்; மஞ்சும் - மேகமும்; முருங்கும் - உள்ளடங்கி எரிகின்ற; கனைகடல் - ஒலிக்கும் கடல்; ஏவும் - அம்பு செலுத்தும்; முலையாய் - தலைவியே; படர்ந்தது - சென்றது. தலைவியே நினது மருங்கையும் குழலையும் கண்டு மின்னலும் மேகமும் ஒன்றுக்குள் ஒன்று ஒளித்து விண்ணில் சென்று விட்டது என்று தலைவன் புகழ்ந்தான். இவ்வாறு சொன்னது தற்குறிப்பேற்ற அணியாம்.

### தலைவியைப் பாங்கியொடு வருகஎனப் பகர்தல்

அழுத்துஞ் சுடர்மணிப் பூணன்ன நீயென் னகங்குளிர
வழுத்துஞ்சொல் பாங்கியோ டெய்திலன் றோவரும்;
வஞ்சக்கஞ்சன்
முழுத்தும்பி சாய்த்த குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
எழுத்துஞ்சொல் லும்பொரு ளுஞ்சேர்ந் தியலு
மிலக்கணமே. 61

### பாங்கிற் கூட்டல்

கன்நில மென்நெஞ்ச மானுலும் வாசக் கமலநிறை
பொன்நில மாம்பொகுட் டென்றிருந் தீர்;சொற்
புலவர்தொல்லான்
முன்னில மென்னுஞ்சொல் கேளாத சங்கர மூர்த்திநல்லூர்
நன்நிலம் கொண்டதண் சோலைநல் லோரையில்
நண்ணுகவே. 62

பாங்கற் கூட்டம் முற்றும்

---

61. பூண் - ஆபரணம்; வஞ்சக் கஞ்சன் - வஞ்சகமுடைய கம்சன். முழுத் தும்பி - பெரிய யானை, சாய்த்த - கொன்ற; "இலக்கணம் என்பது எழுத்தும் சொல்லும் பொருளும் சேர்ந்து நடக்கும்; அது போலத் தலைவியே! நீயும் பாங்கியோடு வந்தால்தான் புகழும் சொல்வரும்" என இயைக்க.

62. கல்நிலம் - கருங்கல் பூமி; வாசம் - மணம்; கமல நிரை - தாமரைக் கூட்டம். பொன் நிலம்-திருமகள் வாழும் இடம்; புலவர் தொல்லான் - புலவருள் பழையோனாகிய அகத்தியனை; முன்னிலம் - நினைக்கமாட்டோம். ஓரை - விளையாட்டு மகளிர் கூட்டம்; நண்ணுக - சேருக. எனது நெஞ்சம் கருங்கல் நிலம் போன்றதானாலும் தாமரையில் திருமகள் வாழும் இடமாகிய பொருட்டு என்பதாகக் கருதித் தங்கி உள்ளாய்; (அதாவது உன்னை மறவேன்;) நீ நின் விளையாட்டு மகளிரான பாங்கியரோடு சேர்க என்றான் தலைவன்.

## பாங்கி மதிஉடன்பாடு

### முன்னுற உணர்தல்

நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பும் செலவும் பயில்வுமென்று
இவ்வகை யேழினும் ஐயமுற் றோர்தல்.

கடிதோன் றுதலொழுக் குண்டலின் நாள்செய் கருமமறைப்பு
அடிதோன்றுஞ் சேறல் பயிற்சியென் றேழும் மரக்கன்பத்து
முடிதோன்றத் தோன்றச் சரங்கோலுஞ் சங்கர மூர்த்தி
நல்லூர்த்
தொடிதோன்றுஞ் செங்கை மடந்தைக்கென் னோநலம்
தோன்றினவே. 63

### அவ்வகை தன்னால் ஐயம் தீர்தல்

நகுமேன்மைக் கஞ்ச முகத்தாய்! நின் செங்கை நகாதகஞ்சம்
தொகுமேன்மை காட்டத் தடத்தே வரால்வெடி துள்ளிப்பைங்க
முகுமேற்சென் றேறுங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
தகுமேயிந் நாள்பிறை முந்நாட் பிறையெனும் தன்மை
கண்டே. 64

---

63. பாங்கி மதி உடன்பாடு - தோழியானவள் தனது அறிவால் தலைவன் தலைவியது களவொழுக்கத்தின் உடன்பாட்டை அறிதல்; கடி-மணம்; அரக்கன்-இராவணன்; சரம் கோலும் - அம்பு தொடுக்கின்ற; தொடி - வளையல்; கடி, தோன்றுதல், ஒழுக்கு, உண்டல், செய்கருமம் மறைப்பு, சேறல்,- பயில்வு என்ற எழு என்பன நாற்றம் தோற்றம் முதலிய.ஏழு. இந்த ஏழினாலும் மடந்தைக்கு நலம் (அழகு) தோன்றியது என்ன காரணமோ என்று தோழி ஐயமுற்றாள்.

64. நகு - விரிந்த; கஞ்சம் - தாமரை; நகாத கஞ்சம் - இதழ் விரியாத தாமரை மொக்கு. தொகு - கூடியிருக்கும். தடத்தே-குளத்தில்; வரால்-வரால் மீன்; வெடிதுள்ளி - வெடிவெடித்தாற்போலத் துள்ளி; கமுகு - பாக்குமரம்; இந்நாட்பிறை முந்நாட்பிறை - இன்று தோன்றிய பிறை மூன்றாம் பிறை; தகும் - இதனைத் தொழத்தகும். இங்ஙனம் பிறை தொழத்தகும் என்று கூறவும் தலைவி பிறை தொழாத படியால் தோழி ஐயந்தீர்ந்தாள். கணவனைப் பெறாத கன்னியர் பிறை தொழுவர்; பெற்றவர் பிறைதொழ மாட்டார். தலைவி தொழாத படியால் இவள் தலைவனொடு களவிற் கூடிவிட்டாள் என்று ஐயம் நீங்கியது.

மெய்யினால் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் சொல்லின் நாடல்

**சுனைநலம் உரைத்தல்**

கற்றா ரிசைக்குந் தமிழ்போலக் கண்ணிறம்; கல்வியன்மை
உற்றா ரிசைக்குந் தமிழ்போ லிதழ்நிற மூட்டல்நன்றோ
முற்றா முகிழ்மலை யார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பொற்றா மரைமுகத் தாய்!புகுந் தாடிய பூஞ்சுனையே. 65

இப்பாடல் கிடைக்கவில்லை. 66

பொய்யினால் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் சொல்லின் நாடல்

**நடுங்கநாட்டம்**

மெய்யாம் பலங்குழல் வாய்மொழிப் பாவை!
வெயர்த்தஞ்சினேன்
பெய்யாம்பல் நீலச் சுனையரு கேசங்கின் பேரொளியால்
மொய்யாம்பல் விள்ளுங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
கையாம்பல் கோடுசெந் நீரால்செவ் வாம்பல் கடுத்தல்
கண்டே. 67

---

65. இதழ் - உதடு; நீண்ட நேரம் நீராடினால் கண்சிவந்து விளர்க்கும். தலைவியே! நீ நீராடிய சுனை உனது கண்ணின் நிறத்தில் சிவப்பு ஊட்டுதலும் இதழின் நிறத்தில் வெள்ளை ஊட்டுதலும் நன்றோ எனத் தோழிகேட்டாள் கற்றார் இசைக்கும் தமிழ் செம்மையாக இருக்கும்; கல்வியில்லாதார் இசைக்கும் தமிழ் வெண்மையாக (பொருளற்றதாக) இருக்கும்.

67. ஆம்பல் அம்குழல் - மூங்கிலால் செய்த குழல்; மெய்வெயர்த்து என இயைக்க. ஆம்பெய் பல் நீலச்சுனை எனமாற்றி, நீர் ஒழுக விடுகின்ற பல நீலப் பூக்கள் பூத்த சுனை எனப்பொருள் கொள்க. சங்கொலியால் - சங்கினை ஊதும் ஓசையால்; மொய் - போரில்; ஆம்பல் விள்ளும் - தனது வெற்றியை எடுத்துரைக்கின்ற; கை ஆம்பல் - துதிக்கையோடு கூடிய யானை. கோடு - தந்தம்; செந்நீர் - குருதி; சுனையின் அருகே யானையின் கொம்பு குருதியால் நனைந்து செவ்வாம்பற்பூப்போல் இருப்பதைக் கண்டு உடம்பு வெயர்த்து அஞ்சிவிட்டேன் என்று தோழி கூறினாள். தலைவி நடுங்கும்படி இங்ஙனம் கூறித் தலைவியின் களவொழுக்கத்தைத் தோழி அறிந்து கொண்டாள்.

### தகையணங்கு உறுத்தல்

மாதணங் காம்நின் விழிவேல் சிவப்பும்செவ் வாய்விளர்ப்பும்
தாதணங் காமலர்க் கூந்தலொவ் வாளஞ் சலர்கள்துஞ்ச
மூதணங் காடச் சமராடுஞ் சங்கர மூர்த்திநல்லூர்ப்
போதணங் காடல்மற் றெல்லாம் நிகர்க்கும்நின் பொற்பினுக்கே. 68

முன்னுற உணர்தல் முற்றும்

## குறையுற உணர்தல்

### பெட்ட வாயில் பெற்று இரவு வலியுறுத்தல்

தளரித் துயர்தவிர் நெஞ்சேகை வேழம் தனையணைக்க
வளரிச்சை யார்மற்றொப் பானைகொண் டெய்தும்வாறேசெங்கைக்கேழ்
முளரித் திருவைக் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
விளரிக் குதலை யுயிர்ப்பாங்கி யைக்கொண்டு மேவுதுமே. 69

### கண்ணியும் தழையும் ஏந்தி நண்ணி ஊர் வினாதல்

ஏதூர்த் தமிய னறியேன் செலும்வழி, யாதுநும்மூர்,
மாதூ ரமோவணித் தோபுகல் வீர்! நிதி மன்னளகை
மூதூ ரெனுமெங்கள் நல்லூரரான் சங்கர மூர்த்திவெற்பில்
காதூருங் கள்ளங் கலந்தூர் தருந்தடங் கண்ணியரே. 70

---

68. அணங்காம் மாது - தெய்வமாகிய பெண்ணே! விழிவேல் - கண்ணாகிய வேல்; தாது அணங்கா மலர்க் கூந்தல் - மகரந்தம் வருத்தாத மலரணிந்த கூந்தலை உடைய தலைவி, அஞ்சலர்கள் - பகைவர்; துஞ்ச - இறக்க; முது அணங்கு - பழையளாகிய கொற்றவை; சமராடும் - போர் செய்யும் போது அணங்கு - தாமரைப்பூவில் உள்ள திருமகள் போன்ற தலைவி; பொற்பு-அழகு.

69. பெட்ட வாயில் - விரும்பப்பட்ட தூதாகிய தோழி; வேழம் - யானை; அணைக்க - பிடிக்க; இச்சையார் - ஆசையுடைய வேட்டுவர்; கேழ் - நிறம்; முளரி - தாமரை; திருவை - திருமகள் போன்ற தலைவியை; விளரிக் குதலை - விளரி என்னும் இசைபோல் மழலைச்சொல்; மேவுதல்-பொருந்தல்; யானையைப் பிடிக்க விரும்பும் வேட்டுவர் அதை ஒத்த மற்றொரு யானையைக் கொண்டு பிடிப்பதுபோல திருமகளான தலைவியையும் உயிர்ப் பாங்கியைக் கண்டு பொருந்துவோம் என்றான் தலைவன்.

70 தமியன் - தனித்து வந்த யான்; மா தூரமோ - மிகத் தொலைவோ அணித்தோ - பக்கந்தானோ; புகல்வீர் - சொல்லுவிராக; நிதிமன் - குபேரன்; அளகை- அளகாபுரி; காது ஊரும் கண் - காதுவரை நீளும் கண்; கள்ளம்- கபடம்; ஊர்தரும் - தவழ்ந்து செல்லும்; தடம் - பெரிய.

### பெயர் வினாதல்

போதுங் கடலும் புறம்போக விட்டிங்குப் போந்திருந்தது
யாதுங்க ளூரென் பதுவுஞ்சொல் லீர்சங் கெறிதிரைமேல்
மோதுந்தண் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
ஓதுங் கிளியனை யீர்பெய ரேனு முரைத்திடுமே. 71

### கெடுதி வினாதல்

வண்மாவை வென்ற விழியீர்நும் மேனல் மலிந்தபுனத்து
எண்மாற நானின்று வில்வாங்கி நாணொறிந் தெய்கணையால்
முண்மா விதுவென்னக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
ஒண்மா னயல்சென்ற துண்டோபண் மான வுரைத்திடுமே. 72

### ஒழிந்தவை வினாதல்

தொழுதார்வம் முற்றும்கண் டீரச்சொல் லாப்பொருள் சொல்லுஞ்சொல்லில்
பழுதாகு மோமலர்ப் பாவைஅன் னீரிப் படியைவிண்போல்
முழுதாள் வலாரி குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
எழுதா மறைமுடி வின்பொரு ளோவுங்க ளின்சொல்லுமே. 73

---

71. போது - தாமரைப்பூ; போதும் கடலும்....இருந்தது யாது என்றது தலைவியைத் திருமகளாகக் கருதி, அவள் இருக்கும் இடமாகிய தாமரைப் பூவையும், பிறப்பிடமாகிய பாற்கடலையும் கைவிட்டு இங்கு வந்திருக்கும் காரணம் என்ன என்று வியந்ததாகும். போந்து - வந்து; இருந்ததி யாது-இதில் தி என்பதன் இகரம் குற்றியலிகரம்; எறி திரை - வீசும் அலை; காயல் - குளம்; ஓதும் - பேசும்; ஊர் யாது என்பதைச் சொல்லீர் ஆயினும் உங்கள் பெயரேனும் உரையுங்கள் என்றான் தலைவன்.

72. கெடுதி வினாதல் - தன்வால் கானாமற் போக்கியதை வினாவுதல்; வண் மா - வளப்பமுடைய மாவடு; ஏனல் - தினை; மலிந்த - நிறைந்த; என் மாற - எண்ணிக்கை இல்லாதபடி; வில்வாங்கி - வில்லை வளைத்து; எய்கணை - எய்த அம்பு; முள்மா - முள்ளம் பன்றி; பண் - இசை; விழியீர்! ஏனல் புனத்தில் ஒண்மான் எய்கணையால் முள்மா என்னச் சென்றதுண்டோ உரைத்திடும் என இயைக்க.

73. ஆர்வம் - ஆசை; சொல்லாப் பொருள் சொல் - நீங்கள் பேசாதிருக்கும் பொருளை உணர்த்தும் சொல்: பழுது - குற்றம்; மலர்ப்பாவை - திருமகள்; படியை - உலகத்தை; விண்போல்-தேவலோகத்தைப் போல; வலாரி-இந்திரன்; எழுதா மறை - எழுத்தில் எழுதப்படாமல் வாய்மொழியாக இருந்து வரும் வேதம்; மறை முடிவு - வேதாந்தம்.

### யாரே இவர்மனத்து எண்ணம் யாதுஎனத் தேர்தல்

கழைதேடியவிற்கை வேளனை யார்நறும் கண்ணியொடும்
தழைதேடிக் கைபிடித் தூர்பேர் வினாவித் தறுகண்சிங்கம்
முழைதேடி யன்னக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
உழைதேடு வாரிவர் யாரெண்ணம் யாதென் றுரைப்பரிதே. 74

### எண்ணம் தெளிதல்

துயலோடுந் தாழ்தொடை யார்கலை வேட்டை துணிந்ததிந்தப்
புயலோடுஞ் சேர்குழல் மான்பொருட் டேயம்
புலியைமுன் நாள்
முயலோடுந் தேய்த்த வனைப்போற்றும் சங்கர
மூர்த்திநல்லூர்
வியலொடுங் காவெற் பிடத்தே யிவர்க்கில்லை
வேறெண்ணமே. 75

குறையுற உணர்தல் முற்றும்.

## இருவரும் உள்வழி அவன்வரவு உணர்தல்

### கையுறை ஏந்திவருதல்

ஆக்கும் புனத்தி லிவர்சிறு பூவையு மஞ்சுகமும்
காக்கும் படிவந் திருந்தார் நிருதிகொங் கைக்குவடும்
மூக்கும் குழையும் களைந்தார்க்கும் சங்கர மூர்த்திநல்லூர்
மாக்குன் றினில்செல்ல லாம்சொல்ல லாம்நல்ல வாசகமே. 76

---

74. கழை தேடிய வில் - கரும்பால் தேடிச் செய்தவில்; வேள் - மன்மதன்; கண்ணி - தலையில் அணியும் மாலை; தழை - இலையால் செய்த உடை; தறுகண் - வீரம்; முழை - குகை; உழை - மான்; உரைப்பரிது - சொல்லமுடியாது.

75. துயலோடு - அசைதலோடு, தாழ்தொடையார் - தாழ்ந்து தொங்கும் மாலை அணிந்த தலைவன், கலைவேட்டை - மான்வேட்டை, புயல் - மேகம், குழல் மான் - கூந்தலை உடைய மான் போன்ற தலைவி, அம்புலியை முயலோடும் தேய்த்தவன் - சந்திரனை முயற்களங்கத்தோடு காலால் தேய்த்தழித்த வீரபத்திரக் கடவுள், வியலோடும் வெற்பு - அகன்று நீண்டு ஓடிக்கிடக்கும் மலை.

76. ஆக்கும் புனத்தில் - தினை வளர்க்கும் கொல்லையில், பூவை - நாகணவாய்ப்பறவை, அஞ்சுகம் - கிளி, நிருதி - அரக்கி; ஈண்டு சூர்ப்பனகையைக் குறிக்கும் குழை - கூந்தல், களைந்து - நீக்கி. ''இவர் புனத்தில் வந்திருந்தார்; ஆகவே குன்றினில் செல்லலாம்; நல்ல வாசகம் சொல்லலாம்'' என முடிக்க.

### கையுறை ஏந்திவந்து அவ்வகை வினாதல்

உகவேழும் வென்றமென் சொல்லீரென் போர்வில்
உதைத்தகணை
புகவேழு யர்ந்தொன் பதுநீண்டு மாமத முற்றபுகர்
முகவேழ மொன்று குடநாடன் சங்கர மூர்த்திவரை
அகவேழம் சாயவந் தெய்திய தோநும் மகன்புனத்தே. 77

### எதிர்மொழி கொடுத்தல்

எழுவைவெல் லும்புயத் தீர்!திணை பாலறிந் தெம்மிடமாம்
உழுவையங் கானிப் பொழுது வினாச்செப்பு மொண்மரபீர்
முழுவை யகம்புகழ் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
வழுவையிங் கேகண் டிலம்யாம் மதியின் வழிசொல்லவே. 78

### இறைவனை நகுதல்

நாரிச் சிலையின்றி வேழமெய் தாரினி நாண்பிணியா
மாரிச் சிலையும்கைக் கொள்வர்கொ லாம்பொன்
மதில்மிதிலை
மூரிச் சிலையிரு துண்டாக்கும் சங்கர மூர்த்திநல்லூர்
வேரிச் சிலைகொண் டடைந்தாரிவ் வேந்தரை வெல்லரிதே. 79

---

77. ஏழும் உக வென்ற - ஏழுசுரமும் கீழாகும்படி வென்ற. உதைத்த கணை - உந்திச் செலுத்திய அம்பு. ஏழு உயர்ந்து ஒன்பது நீண்டு - ஏழுமுழம் உயர்ந்து ஒன்பது முழம் நீண்டு; இது உத்தம யானையின் இலக்கணம். புகர் முக வேழம் - புள்ளி பாய்ந்த முகமுடைய யானை. வரை அக வேழம் சாய - மலை யிடத்தே முளைத்த மூங்கில் சாயும்படி.

78. எதிர்மொழி - பதில்பேச்சு. எழுவை - கணையமரத்தை. புயத்தீர் - தோள்களை உடைய தலைவரே! திணை பால் அறிந்து-எமது இடம் குறிஞ்சித் திணை என்பதும் யாம் பெண்பாலர் என்பதும் அறிந்துகொண்டு. உழுவை - புலி; சிறுத்தையுமாம்: வினாச்செப்பும் - வினாவைக்கேட்கின்ற. மரபீர் - மரபு அறிந்தவரே; வையகம் - உலகம்; வழுவை - உம்மால் வழுவி விடப்பட்ட பொருளை; அதாவது காணாமற் போக்கியதை.

79. நாரி - வில்லில்கட்டும் நாண். சிலை - வில்; வேழம் - யானை; நாண் பிணியா; மாரிச்சிலை - நாண் பூட்டாத மேகத்தில் தோன்றும் வில்; அதாவது வானவில். மூரிச்சிலை - வலியவில். வேரிச்சிலை - தேன் சொட்டும் கரும்புவில். வேந்தரை - தலைவரை.

### மதியின் அவர்மனக் கருத்து உணர்தல்

அஞ்சங் குலாம்நடை கண்வண்டும் அண்ணல்க ணம்புயமும்
நெஞ்சங் குலாம்பொரு ளைச்சாற்றிக் காயலும் நீள்பழன
முஞ்சங்கு லாங்குட நாடாளி சங்கர மூர்த்திவெற்பில்
வஞ்சம் குலாந்தினைக் காவலும் வேட்டையும் மாற்றியதே. 80

## இருவரும் உள்வழி அவன்வரவுணர்தல் முற்றும்

## பாங்கியிற் கூட்டம்

### இரந்து பின்நிற்றல்

சுற்றிலும் கைக்கவண் கல்லாக மீனம் துலங்கவைக்கோ
சற்றிலும் சிற்றிடை நல்லீர்! விமானமும் தண்மதியும்
முற்றிலும் தென்குட நாடாளி சங்கர மூர்த்திவரை
சிற்றிலு மாகச்செய் கோவெவக் கோர்பணி செப்பிடுமே. 81

### பாங்கி குலமுறை கிளத்தல்

கண்நடை மல்கிய நல்லூரென் னூரெம தூர்குறிச்சித்
தண்ணடை மல்கு குடநா டுன்நாடு தடந்தெரியா
முண்நடை நாடுமெங் கிரிநாடு சங்கர மூர்த்திசைலப்
பண்ணடை சொல்லி குறக்கொடி நீதிறல் பார்த்திபனே. 82

---

80. அஞ்சம் - அன்னப்பறவை; அம்புயம்-தாமரை; காயல் - குளம்; பழனம்-வயல்; சங்கு உலாம் - சங்குகள் உலாவுகின்ற; வஞ்சம் - பொய்; தலைவியின் கண்ணாகிய வண்டும் தலைவனின் கண்ணாகிய தாமரையும் (ஒன்றை ஒன்று நோக்கியதால்)அவரது உள்ளக்கருத்தை அறிவித்தன. அதனால் தலைவின் பொய்யான தினைக்காவலையும் தலைவனது பொய்யான வேட்டையையும் மாற்றிவிட்டது.

81. மீனம் - விண்மீன்கள் ; சற்றிலும் சிற்றிடை - சிறியதினும் சிறியதான இடுப்பு; விமானம் - இந்திரவிமானம்; மதி - சந்திரன்; சிற்றில் - விளையாட்டுக்கு உரிய மணல் வீடு; பணி செப்பிடும் - வேலை இடுங்கள். !''உங்களுக்கு விண் மீன்களைக் கவண்கல்லாகக் கொண்டுவந்து வைக்கட்டுமா?'' என்று தலைவன் இரந்து பின்நிற்கிறான்.

82. தண்ணடை - வயல். தடம் - வழி. கிரி - மலை. சைலம் – மலை. பார்த்திபன் - அரசன். ''கள்குடித்தல் மிக்க நல்லூர் என்ற ஊர் எமது ஊர்; வயல் மிக்க குடநாடு உனது நாடு; முள்நிரம்பிய நாடு எமது மலை நாடு; தலைவியோ குறப்பெண்; தலைவரே! நீயோ மன்னன்'' என்றாள் தோழி.

### தலைவன் தலைவிதன்னை உயர்த்தல்

பாந்தளின் மாலைப் பிரான்வேட் டதுமப் பிரமன்பெற்ற
காந்தளின் மாலைப் பிரான்வேட் டதுஞ்சொல்லிக் காட்டுதற்கு
மோந்தளி பாடும் மலர்த்தாமன் சங்கர மூர்த்திநல்லூர்
மாந்தளிர் மேனி மடந்தாய் கடலும் மலையுமுண்டே. 83

### நன்னுதல் பாங்கி அறியாள்போன்று வினாதல்

கூடிநின் றாரொரு கோடிநின் றார்புனை
கொற்றப்பொற்றோள்
வாடிநின் றாகுலம் கொள்ளநின் றாளெவள் வஞ்சரஞ்ச
மோடிநின் றாடச் சமராடுஞ் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பாடிநின் றாரி லளிபாடும் சோலையில் பார்த்திபனே. 84

### இறையோன் இறைவிதன்மை இயம்பல்

கைக்கிணைக் காந்தள் இடைக்கிணைப் பாந்தள்; கனிந்ததளிர்
மெய்க்கிணை; யோங்குகொங் கைக்கிணை கோங்குநெல்
வேயும்மள்ளர்
மொய்க்கிணை யோங்கும் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
மைக்கிணைக் கூந்தல்நல் லாய்என்னை வாழ்விக்கும்
மன்னுயிர்க்கே. 85

---

83. பாந்தளின் மாலைப் பிரான் - பாம்பு மாலை அணிந்த சிவபெருமான். இவன் மலைமகளை இமயமலையில் மணந்துகொண்டான். பிரமன் பெற்ற - பிரமன்படைத்த. காந்தளின் மாலை - காந்தட்பூமாலையை அணிந்த மணமகள். பிரான் - ஈண்டுத் திருமாலைக்குறிக்கும். திருமால் மண்மகளைக் கடலினின்று மேலே கொண்டுவந்து மணந்து கொண்டான். வேட்டல் - மணம் செய்து கொள்ளுதல். அளி - வண்டு. தாமன் - மாலையை அணிந்தவன். ''சிவபெருமான் மலைமகளை மணந்து கொண்டதைச் சொல்லிக்காட்ட இமயமலை இருக்கிறது; திருமால் மண்மகளை மணந்து கொண்டதைச் சொல்லிக்காட்டக் கடல் இருக்கிறது'' என்றான் தலைவன்.

84. கூடி நின்றார் - கூட்டமாய் கூடி நின்ற தோழிமார்கள். புனை - அழகு செய்த. கொற்றம் - வெற்றி. ஆகுலம் - வருத்தம். மோடி - காளி. சமராடும் - போராடும். நல்லூர்ப்பாடி நின்றாரில் - நல்லூரைப்புகழ்ந்து பாடிய புலவர்களைப் போல. அளி - வண்டு. பார்த்திபனே - மன்னவனே!

85. இணை – ஒப்பு; பாந்தள் - பாம்பு; மெய் – உடம்பு; மை - மேகம்; நல்லாய் - பெண்ணே! (தோழியே.) ''தலைவியின் கைக்குக் காந்தள்பூவும் இடுப்புக்குப் பாம்பும் உடம்புக்குத் தளிரும் கொங்கைக்குக் கோங்கும் ஒப்பாகும்'' என்று தலைவன் தலைவியின் தன்மை கூறினான். உயிர்க்கு – உயிரை ஒத்த தலைவிக்கு.

### பாங்கி தலைவியருமை சாற்றல்

இலையில் பிறழ்ந்தவை வேலா எளியனென்
றெண்ணல்செய்யாள்
அலையில் பிறந்ததி னால்வீரை மாதென்பர் அம்பொன்மின்னார்
முலையார் பிறந்திட மால்பூட்டும் சங்கர மூர்த்திநல்லூர்
மலையில் பிறந்ததி னால்வீர மாதெங்கள் மாதென்பரே. 86

### தலைவன் இன்றியமையாமை இயம்பல்

மாதுணர்ந் தாயில்லை யென்னாவி காக்கின்ற வாறுநெஞ்சைத்
தூதுணர்ந் தாரில் செலுத்தியும் மீட்டும் துதித்துமன்றோ
மூதுணர்ந் தோர்சொல் தமிழ்தேரும் சங்கர மூர்த்திநல்லூர்த்
தாதுணர்ந் தாலளி சூழ்பூங் குழலி தனைநினைந்தே. 87

### பாங்கி நின்குறை நீயே சென்றுஉரை என்றல்

மதுக்குறை யாமல ரும்வண்டும் போலுன் மனக்குறையைப்
புதுக்குறை வேன்மன்ன! நீசொல்வ தேயன்றிப் பொய்குறைத்த
முதுக்குறை வோர்புகழ் நல்லூரரன் சங்கர மூர்த்திவெற்பில்
விதுக்குறை போல்நுதல் பால்பிறர் கூறின் மிகுங்குறையே. 88

---

86. இலையில் - இலைபோல; பிறழ்ந்த - திரும்பிய; வை வேலா - கூர்மையான வேலை உடைய தலைவனே! எண்ணல் – நினைக்காதே. செய்யாள் - இலக்குமி; அலையில் – கடலில்; விரைமாது – கொற்றவை; மால்பூட்டும் – மயங்க வைக்கும்; விரமாது - கொற்றவை. எங்கள் மாது - எம்முடைய தலைவி. ''வேலனே! எங்கள் தலைவியை எளியவள் என்று நினையாதே; அவள் கடலில் பிறந்ததால் திருமகளாவாள். மலையில் பிறந்ததால் கொற்றவையாவாள்; பொதுவாக மற்ற பெண்கள் எல்லாம் இவளை விரைமாது என்பார்கள்'' என்று தோழி தலைவியின் அருமையைக் கூறினாள்.

87. மாது-பெண்ணே (தோழியே). தூது உணர்ந்தாரால்-தூதாக ஏற்றுக் கொள்ளப்பட்டவரைப்போல்; மூதுணர்ந்தார் – மிகவும் கற்றவர். தேரும் - ஆராய்கின்ற; தாது உணர்ந்து அளிசூழ் – தாதை அறிந்து வண்டு சூழ்கின்ற; ஆல், அசை; பூங்குழலிதனை – தலைவியை.

88. மதுக் குறையாத - தேன் நிறைந்த; புதுக்கு உரைவு ஏன் – புதிதாக்கிப் பிறர் உரைப்பது ஏன்? மன்ன - தலைவனே! பொய் குரைத்த - பொய்யை நீக்கிய; முதுக்குறைவோர் – அறிஞர்; விதுக்குறைபோல் – சந்திரனின் பிறைத் துண்டம் போலும்; நுதல் - நெற்றி. ''மலரை நாடும் வண்டைப் போலத் தலைவனே உன்குறையை நீயே சொல்வதன்றிப் பிறர் புதிதாக்கி உரைப்பது ஏன்? அங்ஙனம் பிறர் கூறின் உனக்கும் பெருங்குறைபாடாகும்'' என்றாள் தோழி.

### பாங்கியைத் தலைவன் பழித்தல்

உருகா விரும்பி லுருக்குருக் காயினை யொண்டொடிதன்
அருகா யிருந்துமென் னோஉரை யாய்வண் டடைகிடக்கும்
முருகாய சோலைக் குடநாடன் சங்கர மூர்த்திவரைக்
குருகாய்த் தரும்செங்கை நங்காய் கொடிது கொடிதுநெஞ்சே. **89**

### பாங்கி பேதைமை ஊட்டல்

குறுக்கிக்கை நீட்டிச் சிலைவாங்கி வெஞ்சரம்
கோத்திதழ்வண்டு
உறுக்கிக் கலைக்கலை யக்கொல்லு வார்கண்ணி யோங்குதறி
முறுக்கிப் பிடுங்குங்கை மாவேந்தன் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பெருக்கிக் கருதத் தமர்போல்நின் சோர்வெண்ணப்
பெற்றிலளே. **90**

### காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்

கோதறி வார்குலக் கன்னியென் றாய்மைக் குவளைக்கண்ணால்
தூதறி வாயென் றெனக்குனைக் காட்டித் துயர்துடைத்த
மூதறி வாள்நம் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
மாதறி யாளென்ற தொன்றுங்கொல் லோமதி வாணுதலே. **91**

---

89. உருகா இரும்பில் - (தன்னுள் இட்ட வெண்ணெய் உருகினும்) தான் உருகாத இருப்புச் சட்டியைப் போல; உருக்கு உருக்காயினை - பிறவற்றை உருக்கும் எஃகு இரும்பாக நீ இருந்தாய். தோழியோடு கூடிய தலைவி மன முருகவும் தோழி மனமிளகாது இருந்ததால் தலைவன் இங்ஙனம் கூறினான். அடை கிடக்கும் - அகலாமல் தங்கி இருக்கும்; முருகாய சோலை - மணம் மிகுந்த சோலை; வரைக் குருகாய் - மலையிலே உள்ள சங்க நிதியைப் போல.

90. குறுக்கி - வலக்கையை உட்பக்கமாக இழுத்து; கைநீட்டி-இடக்கையை முன்னே நீட்டி; சிலை வாங்கி - வில்லை வளைத்து; வெஞ்சரம் கோத்து-கொடிய அம்பைப் பூட்டி, இதழ் வண்டு உருக்கி - பூவிதழில் தேன்பருகும் வண்டுகளைத் துரத்தி; கலைக்கு – மானுக்கு; அலைய - துன்பமுண்டாகும்படி; கொல்லுவார் கன்னி – கொல்லும் வேடரது மகள்; தறி முறுக்கி – கட்டுத்தறியைத் திருகி; கைமா – யானை; தமர்போல் – தம் சுற்றத்தாரைப் போல; ''தலைவி தன்தமர் போலக் கொடியளேயன்றி உனது வருத்தத்தை எண்ணும் தன்மையள் அல்லள்'' என்று தலைவியின் பேதமையைத் தோழி கூறினாள்.

91. கோது - குற்றம்; மைக்குவளை – கருங்குவளை; மூதறிவாள்-பேரறிவு உடையவள்; ஒன்றுங்கொல்லோ - பொருந்துமா? வாணுதலே-ஒளிமிக்க நெற்றி யுடைய தோழியே!

### பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்

என்னுறுந் தன்மை பிறர்பா லிசைத்துன் னிதயமலர்ப்
பொன்னுறுந் தன்மையின் நின்றாளந் நீர்மை புரிந்ததுண்டேல்
முன்னூறுந் தன்மைக் குடநாடன் சங்கரமூர்த்தி வெற்பா!
மின்னூறும் தன்மையும் மேகமும் போலின்னும் மேவுகவே. 92

### தன்நிலை தலைவன் சாற்றல்

பொன்னா லலது மிடிதவி ராது; பொழியும்மழை
தன்னா லலது தணியாது கோடை; ததியையுண்டு
முன்னா லிலையில் துயில்கூருஞ் சங்கர மூர்த்திநல்லூர்
உன்னா லலதுமின் னேயொழி யாதென் னுறுதுயரே. 93

### பாங்கி உலகியல் உரைத்தல்

செழுநாள் மலர்க்கண் கடம்பனைப் போல்நங்கை செங்கைபற்றி
எழுநா வெரிமுன்னம் நீரிரு நால்க ளிசைப்பநல்லோர்
முழுநா வலர்புகழ் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா
தொழுநான் மறையின் முறைநீ மணப்பது தொல்லியல்பே. 94

---

92. என் உறும் - என்ன வந்து சேரும்? தன்மை - தலைவியின் மூதறிவுத் தன்மையை; பொன் உறும் தன்மையின் - திருமகள் போன்ற இயல்பில்; நின்றாள் – நின்ற தலைவி; நீர்மை - இயல்பு. புரிந்தது – செய்தது; மின்னலும் மேகமும் இயைந்துள்ளவாறே நீங்களும் பொருந்துங்கள் என்றாள் தோழி; மேவுக - பொருந்துக.

93. மிடி - வறுமை; கோடைக்கால வெப்பம்; ததி - தயிர். தயிரை உண்டு ஆலிலையில் துயின்றது கண்ணன்; அக்கண்ணனே சங்கரமூர்த்தி என்பது புலவர் கருத்து. மின்னே-மின்னலை ஒத்த தோழியே. பொன்னாலன்றி வறுமை நீங்காத வாறு போலவும் தோழியே! உன்னாலன்றி என் துயரம் நீங்காது என்றான் தலைவன்.

94. கடம்பனைப்போல் – முருகக்கடவுளைப்போல். எழுநா எரி முன்னம்– ஏழுநாக்குகளைஉடைய யாகத்தியின் முன்னே. நல்லோர் இருநால்கள் இசைப்ப- மங்கலமடந்தையர் அட்ட மங்கலம் ஏந்தி மங்கலம் கூற. நான்மறையின் முறை - வைதிக முறைப்படி. தொல்லியல்பு - பழைய மரபாகும்.

**தலைமகன் மறுத்தல்**

வளைவாரி பண்டு கடைந்தமு தூட்டவல் லானும்மறைந்து
அளைவாரி யுண்ட தறிந்திலை யோபசிக் கய்யருக்கு
முளைவாரி யன்னந் தருங்கீர்த்தி சங்கர மூர்த்திநல்லூர்க்
கிளைவாரி சூழ்மண மோவுயிர் காக்கும் கிளிமொழியே. 95

**பாங்கி அஞ்சி அச்சுறுத்தல்**

தாரலங் காரப் புயத்தா யகலுதி; தாழ்ந்ததுபோது;
ஆரலங் காரென் றடைவரிந் நேர மவிரும்முத்த
மூரலங் காரிகை யார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்
வேரலங் கான வரைக்கா னவரை விலக்கரிதே. 96

**ஆங்கு அவன் கையுறை புகழ்தல்**

இன்நீர்மை யாரங்க ளெந்நாட்டி னும்மில்லை யேந்திழைநின்
பொன்நீர்மை யாட்கணி யாம்;குட நாடு புடைவளைந்த
முன்னீ ரனும்தமிழ் நல்லூரன் சங்கர மூர்த்தியிசை
நன்நீர்மை கொண்ட மலையா சலத்தினுள்
நான்கொண்டதே. 97

---

95. வளை வாரி – சங்குகள் மிக்க கடல், அமுது ஊட்ட வல்லான் - அமிர்தம் பகிர்ந்து வழங்கிய திருமால்; அளை - வெண்ணெய்; தோழியே! திருமால் கூடத் தன் பசிக்காக ஒளிந்து சென்று வெண்ணெய் உண்டதை நீ அறிவாயன்றோ! (அது போல நானும் களவொழுக்கம் வேண்டி நிற்கிறேன்) என்றான் தலைவன். முளை வாரி அன்னம் தரும் – நெல்முளையை வாரி வந்துகூட சோறு அளிக்கும். கிளை வாரி – சுற்றத்தாராகிய கடல்; மணமோ உயிர் காக்கும் - மணம் செய்து கோடல் தற்போது என் உயிரைக் காக்குமோ?

96. தார் - மாலை; புயத்தாய் - தோள்களைஉடைய தலைவனே! அகலுதி இவ்விடம்விட்டு நீங்குக; ஆரல் - கார்த்திகை மாதம். ஆரலங்கார் என – கார்த்திகை மாதத்து மேகம் போல; அவிரும் – ஒளிவிடும்; மூரல் - பற்கள்; காரிகையார் - மகளிர்; வேரல் – மூங்கில்; கான வரைக் கானவரை - காடுகளை உடைய மலையில் வாழும் வேடுவரை; விலக்கு அரிது – தடுக்க முடியாது.

97. இன் நீர்மை - இனிய தன்மையுடைய; ஆரங்கள் - சந்தனத்தழைகள். பொன் நீர்மையாட்டு - திருமகளை ஒத்த தலைவிக்கு; அணியாகும் – அணியத் தக்க தழையுடை யாகும். புடைவளைந்த முன்னீர் - பக்கமெல்லாம் சூழ்ந்த கடல்; இசை - புகழ்; மலையாசலம் - பொதியமலை.

### தையல் மறுத்தல்

கடுக்கும் கடுவினே மாமணிக் கோவையைக் காட்சியின்பின்
அடுக்கும் துறையி னயிர்ப்பார்மின் பூணின்; அடையலரை
முடுக்கும் பரிமன் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
உடுக்கும் தழையு முசாவிடும் போதி லுறுந்தழையே. 98

### ஆற்றா நெஞ்சினோடு அவன் புலத்தல்

நம்மாவி சோர்ந்தெனச் சோரும் நெஞ்சேயிந்த நங்கைநம்பால்
அம்மா சிறிது மிரங்கில ளே;கஞ்ச னன்றுவிட்ட
மும்மா மதக்குஞ் சரம்சாய்த்த சங்கர மூர்த்திநல்லூர்
எம்மா மலைமல யப்பூந் தழையு மெளிமைபெற்றே. 99

### அவள் ஆற்றுவித்து அகற்றல்

கலையேறு புந்திமன் னா!இன்று போகநின் கையுறையைச்
சிலையேறு நன்னுத லைத்தேற்றிச் சேர்ப்பன் சிறுமருங்குல்
முலையேற நாளை குடநாடன் சங்கர மூர்த்திதமிழ்
மலையேறி யுங்கட லோடியும் நீதந்த வாறுரைத்தே. 100

இரந்து பின்நிற்றல் சேட்படை முற்றும்

---

98. கடுக்கும் - ஐயுறத்தக்க; கடுவினேம் ஆம் - நஞ்சு போன்றவர் ஆவேம். மணிக்கோவையை - முத்துமணிக்கோவையை. அடுக்கும் - நெருங்கி வரும். துறையில் - விளையாடுமிடத்தில்; அயிர்ப்பர் – ஐயுறுவர். மின் பூணின் – மின்னல் போன்ற தலைவி அணிந்தால்; அடையலர் – பகைவர்; முடுக்கும் – வெருட்டும்; பரிமன் – குதிரையுடைய அரசன்; உசாவிடும்-விசாரிக்கும். ''தலைவனே! நீதந்த முத்துமாலையைத் தலைவி அணிந்தால் அதைக்கண்டபின் விளையாடுமிடத்தில் எமர் ஐயுறுவர்; வழக்கமாக உடுக்கும் தழை உடையைக் கண்டே இது ஏது என்று விசாரிக்கும்போது நீகொடுக்கும் உயர்ந்த தழையை உடுத்தால் ஐயுறத் தக்க நஞ்சாகி விடுவோம்'' என்று தலைவி கையுறை மறுத்தாள்.

99. ஆவி சோர்ந்து என – உயிர் வாடியதைப்போல; நங்கை - தோழி; மா மதக் குஞ்சரம் - பெரும் மதத்தையுடைய யானை; சாய்த்த – கொன்ற; எம்மாமலை மலையப் பூந்தழை – எமது பெரிய மலையாகிய பொதிய மலையில் இருந்து கொணர்ந்த பூந்தழையும்; எளிமைபெற்று - சாதாரணப் பொருளாகி மலையப் பூந்தழையும் எளிமை பெற்று ஆவி சோர்ந்து எனச் சோரும் என இயைக்க.

100. கலைஏறு புந்தி – கலைபலவும் மிக்க அறிவு. சிலை ஏறு – வில் போன்ற; நன்னுதல் - நல்ல நெற்றியை உடைய தலைவி; மலை ஏறியும் கடலோடியும் நீதந்தவாறு - பொதிய மலையில் ஏறிச் சந்தனத்தழை கொண்டு வந்தவாற்றையும், கடலில் சென்று முத்துக்களைக் கொண்டுவந்த வாற்றையும். ''மன்னா! நன்னுதலைத் தேற்றி நின்கையுறையை நாளைச் சேர்ப்பன்'' என இயைக்க.

## மடற்கூற்று, மடல்விலக்கு

**இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன்**
**மடலே பொருள்என மதித்தல்**

வல்லென் றெழுநெஞ் சே!பெரி யோரேவல் வல்லவர்க்குப்
புல்லென்ற தாயுத மென்பார்நம் பாலும் பொறிச்சுரும்பு
மொல்லென்ற பூம்பொய்கை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
அல்லென்ற கோதை தரும்காம நோய்க்கி தருமருந்தே. 101

**பாங்கிக்கு உலகின்மேல் வைத்து உரைத்தல்**

கதிரை யிடுங்கழல் காளையர் தாம்கிழி கைப்பிடித்துக்
குதிரை யெனும்பனை மாமடல் ஊர்வர்பின் கொம்பனையாய்!
முதிரை மிகுந்த தமிழ்நாடன் சங்கர மூர்த்திநல்லூர்
வெதிரை வனந்துன்றும் வெற்பர்கள் காமம் மிகுந்திடவே. 102

**அதுதனைத் தன்மேல் வைத்துச் சாற்றல்**

அடலை புனைந்தெருக் கென்பொடு பூளை யணிந்துபனை
மடலை யணிந்துமன் காண்பன்மின் னே!மரு வார்கள்
வெம்போர்
முடலை யடைந்தகை [மா]பார்த்த சங்கர மூர்த்திநல்லூர்க்
கடலை விசைந்துநம் சிறூரினத் தென்னைக்
கண்டிடவே. 103

---

101. வல் என்று - விரைவாக. வல்லவர்க்குப் புல் என்ற ஆயுதம் - எய்ய வல்லவனுக்குப் புல்லியதும் கூட நல்ல ஆயுதமாகும். பொறிச்சுரும்பு-புள்ளிகளை உடைய வண்டு. மொல் என்ற - மொல் என்று ஒலிக்கின்ற; மொல் - ஒலிக் குறிப்புச்சொல். பொய்கை - குளம். அல்லென்ற கோதை - இருட்டை வென்ற கூந்தல்.

102. கதிரை இடும் கழல் - ஒளிக்கதிர்களை வெளியிடும் விரக்கழல், காளையர் – ஆண் மக்கள்; கிழி - ஓவியம் எழுதிய துண்டுத் துணி; முதிரை – துவரைப் பயிர்; வெதிர் ஐவனம் - மூங்கிலும் மலை நெல்லும்; துன்றும் – நெருங்கிய, வெற்பர்கள் – மலைவாழும் மக்கள், மடல் ஊர்தலாவது; தன்னால் தலைவியை அடையப்பெறாத் தலைவன்; அத்தலைவியன் ஓவியத்தைத்தானே கிழியில் வரைந்து கையில் பற்றிக்கொண்டு சாம்பலைப் பூசி எருக்கு என்புகளை அணிந்து, பனை மடலால் செய்த குதிரை மீது ஏறி வருதலாம்.

103. அடலை - சாம்பல்; என்பு - எலும்பு; மருவார்கள் - பகைவர்கள்; முடலை - முறுக்கு; கைமா - யானை; கடலை விசைந்து - கடல்போல் ஆர வாரித்து; சிறூர் இனத்து – சிற்றூரில் வாழும் இனத்தவரின் இடையே.

பாங்கி தலைமகள் அவயவத்து அருமை சாற்றல்

கூவிய மாங்குயி லின்னிசை [நீகிழி] கோப்பின்சென்று
தாவிய பார்வை யிருபார்வை நீகிழி தான்எழுதில்
மூவிய மார்மூன்றில் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா
ஓவிய மாதும் தரும்;மேல் வருமுன் னுடற்கின்பமே. 104

தலைமகன் தன்னைத்தானே புகழ்தல்

மாரிகைப் பற்றும் தருமநன் னூலை மருங்கமைத்து
நாரிகைப் பற்றும் புறத்தலங் காரங்கள் நாடியெழு
மூரிகைப் பற்றி முனிந்தவன் சங்கர மூர்த்திநல்லூர்
காரிகை பற்றி வரைவே னகப்பொருள் கண்டிலனே. 105

அலர்முலைப் பாங்கி அருளியல் கிளத்தல்

அரண்மன்னி லன்றிலும் வெள்ளாங் குருகு மடைகிடப்பச்
சரண்மன்னும் நன்நில மாதலி னால்நெடுந் தாலமென்பர்
முரண்மன்ன ரேறன்ன நல்லூரன் சங்கர மூர்த்திவரைத்
திரண்மன்னும் தோள்மன் னவர்குறை யார
நிறைசெல்வனே. 106

---

104. இரு பார்வை - மான் கயல் என்னும் இரண்டனுடைய பார்வைகளை; மூவியம் - மணமுரசு, கொடைமுரசு, வெற்றிமுரசு என்னும் மூன்று முரசங்கள்; தலைவனே! நீ கிழியில் தலைவியின் குயில் போன்ற இசையை எழுதினால், தாவும் பார்வையுடைய மான் கயல் என்னும் இரண்டன் பார்வைகளை எழுதினால் நீ எழுதிய ஓவியத்தில் உள்ள பெண் உடற்கு இன்பம் தருவாள் என்றாள் தோழி; எனவே குயிலின் இசையும் இருவகைப் பார்வைகளையும் எழுத முடியாது என்று அவயவத்து அருமை கூறினாள்.

105. மாரி கைப்பற்றும் தரும நன்னூல் - மழையைத் தன் வயப்படுத்திப் பெய்விக்கும் தரும சாத்திரம்; மருங்கு - இடுப்பு; நாரி - பெண். அலங்காரங்கள் நாடி - அணி நூல்களைப் படித்து; எழு மூரி கை பற்றி - ஏழு மூர்க்கமான காளைகளைக் கையாற் பிடித்து; முனிந்தவன் - சினந்து கொன்றவன்; நாரிகை - பெண்ணை; வரைவேன்-ஓவியமாக எழுதுவேன்; கண்டிலனே-படிக்கவில்லையே? ஏகாரம் எதிர்மறை; நன்னூல், புறம், அலங்காரம், காரிகை, அகப்பொருள் என்னும் இலக்கண நூல்களின் பெயர்கள் தொனிக்கும்படி அமைந்திருப்பதால் இது தொனியலங்காரமாகும்.

106. அரண் மன்னில் - பாதுகாப்பு அமைந்தால்; சரண் மன்னும் நன்நிலம் - புகலாக அடையும் இடம்; தாலம் என்ற சொல்லுக்கு நிலம் என்றும் பனைமரம் என்றும் இருபொருள் இருப்பதால் பனைமரத்தை நிலமாதல் பற்றித் தாலம் என்பார்கள் என்கிறாள் தோழி; முரண் மன்னர் - பகையரசர்.

**கொண்டு நிலை கூறல்**

குழுநீல மேகக் குழல்மட வாள்நின் குறைமறுத்தால்
செழுநீல வாவிவெற் பாவிந்திர நீலமும் சென்றுதொழும்
முழுநீல வண்ணன் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
எழுநீலம் நல்கு மடன்மாவி லேவென்ன வேறுகவே. 107

மடல்கூற்றும் மடல்விலக்கும் முற்றும்.

## உடன்படல், மடல்கூற்று ஒழிதல்

**தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவர்க்கு உணர்த்தல்**

கோடுற வுண்டு பகையில்லை காணின்னம்
கொங்கைக்கம்பொன்
தோடுற வுண்டு பகையில்லை காண்மைத் துணைவிழிக்கு
மோடுறு சோலைக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
நாடுற நின்றிரந்தென்னாமின்னா மெங்கள் நங்கையையே. 108

**தலைவன் தலைவி வருத்திய வண்ணம் உரைத்தல்**

கம்புலிக் கொண்ட சடையான்கை மானும் கலங்கும்மூரி
வெம்புலி குஞ்சரம் கண்டா லணங்கேன்நெல் வெண்டரள
மும்புலிக் கொண்ட குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
அம்புலிப் பிஞ்சு நுதல்மா னிளமை பயத்தன்மையே. 109

---

107. குழு - கூட்டம்; தொகுதி. நீல வாவி - நீலப்பூக்களை உடைய சுனைகள்; இந்திர நீலமும் - இந்திர நீல மணிகளும்; எழு - வளர்ந்தெழும். நீலம்- பனைமரம்; ஏறு அன்ன ஏறுக - காளைபோல் ஏறுவாய்.

108. கோடு - மலை உச்சி. தோடு - காதணி; மைத்துணை விழி - மைபூசிய இரண்டாகிய கண்கள்; மோடு – மேட்டு நிலம். நாடுற - ஆராயுமாறு; ''கொங்கைக்குக் கோடு உறவு உண்டு, விழிக்குத் தோடு உறவு உண்டு இன்னும் பகையில்லை'' என்றது இத்தலைவியின் கொங்கை இன்னும் பருக்கவில்லை; விழி இன்னும் கள்ளம் கொள்ளவில்லை என்று தலைவியின் இளமைத் தன்மையை உணர்த்துகின்றது.

109. கம் புல்லிக் கொண்ட - கங்கை நீரைத் தழுவிக் கொண்ட; புல்லி என்பது புலி என இடைக் குறைந்து நின்றது. கைமானும் கலங்கும் மூரிவெம் புலி - சிவன் கையில் ஏந்திய மானும் அஞ்சுகின்ற வலிய கொடிய புலி; குஞ்சரம் - யானை; அணங்கேன் - வருந்தேன்; வெண்டரளமும் - வெண்முத்தும். புலிக்கொண்ட - குவியலாகக் கொண்ட.

### தலைவி செவ்வி அருமை செப்பல்

பந்தாட லும்சுனை பாய்ந்தாட லும்பொற் பலகையூஞ்சல்
வந்தாட லும்பயி லார்மயி லார்க்குமா மைந்தர்பிந்த
முந்தாடல் வென்றி யபிராமன் சங்கர மூர்த்திநல்லூர்க்
கொந்தாடும் சோலைவெற் பாவென்கொல் யான்சென்று
கூறுவதே. 110

### தலைவன் செவ்வி எளிமை செப்பல்

வாளை யுண்டாடும் விழியாயென் பேர்சொல்ல வல்லையெனில்
நாளையுண் டாமென்ப தோவங்ங னேகணம் நண்ணிலர்தம்
மூளையுண் டாடச் சமராடும் சங்கர மூர்த்திநல்லூர்
வேளையுண் டாவி விடுநகை யாட்குநல் வேளைஉண்டே. 111

### பாங்கி என்னை மறைப்பின் எளிது என நகுதல்

தேனைத் துளிக்கும் மலர்தேடி னுமிதைச் சேர்ந்தணிவார்
ஏனைப் பொருளென் றிகழார்கள் நாரை யிவள்மணமும்
மோனைத் தமிழன் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்ச்
சோனைப் பொருப்பவென் னாரின்றி மேயது தூயதன்றே. 112

---

110. பயிலார் மயிலார்க்கு - (பந்தாடல் முதலியவற்றை) பழகாத மயில் போன்ற தலைவிக்கு; மைந்தர் பிந்த-வீரர் தோற்றோட. முந்தாடல்-முன்னேறிக் கொல்லுதல்; கொந்து - பூங்கொத்து. தலைவி பந்தாடவோ சுனை நீராடவோ ஊஞ்சலாடவோ செய்யாமல் விட்டினுள்ளேயே இருப்பதால் அவளிடம் தனிமையில் சொல்ல இயலவில்லை என்கிறாள் தோழி.

111. வாளை உண்டாடும் விழியாய்!-வாட்படையை வென்று சுழலும் கண்ணை உடைய தோழியே!. கணம் – கூட்டமான; நண்ணிலர் தம் – பகைவருடைய; சமராடும் – போராடுகின்ற; வேளை உண்டு ஆவி விடு - மன்மதனை விழுங்கிக் கொட்டாவி விடுகின்ற; நகையாட்கு - புன்முறுவலை உடைய தலைவிக்கு; நல்வேளை உண்டு – (சொல்லுதற்கு) நல்ல சமயமும் உண்டு.

112. இதை - பூத்தொடுக்கும் நாரை; சோனை-முதலில் பெய்யும் சோனை என்ற மழை; பொருப்ப - மலை நாட்டை உடைய தலைவனே; என்னார் - என்னை ஒத்தவர் எனவும், யானாகிய நார் எனவும் இருபொருள் படும். இது சிலேடை; மேயது - விரும்பியது, தூயதன்று - நன்றன்று.

பாடல் கிடைக்கவில்லை 113

### அவள் தேற்றல்

ஏழ்குஞ் சரம்நிக ரேறேழ் தழுவிய வேந்தலஞ்சல்
சூழ்குன் றவர்மட வார்கொடி யாயினும் துள்ளிவாரி
மூழ்கும் பொருநைக் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
வாழ்குங் குமமுலை யாள்சொன்ன வாறு மறுக்கிலளே. 114

### கையுறை ஏற்றல்

இயல்சிறை மஞ்சையன் னாளிசை யாமை யிசைத்திசைந்தாள்
கயல்சின வும்கனல் கால விதிபோல் கடந்தலரை
முயற்சியொன் றம்ம குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்ப்
புயல்சிலம் பாநல்கு வாய்மல்கு வாசப் புதுத்தழையே. 115

### கிழவோன் ஆற்றல்

மலைப்பா லுறவுரைத் தப்போதிப் போது மலர்த்தநெஞ்சை
நிலைப்பால் நிறுத்தத் தழையேற்ற தால்வஞ்ச நெஞ்சுடைப்
பேய்
முலைப்பா லுயிருடன் உண்டாடும் சங்கர மூர்த்திநல்லூர்ச்
சிலைப்பா லருவி வரைமயில் பாற்சென்று சேர்குயிலே. 116

உடன்படல் மடல்கூற்று ஒழிதல் முற்றும்

---

114. குஞ்சரம் – யானை. ஏறு ஏழ் - ஏழுகாளைகள்; ஏந்தல் – தலைவனே, வாரி மூழ்கும் – கடலில் சென்று புகும். பொருநை - தாம்பிரபரணி ஆறு.

115. மஞ்சை – மயில், கயல் சினவும் கனல்கால – கயல் மீனைப் போன்ற கண் கோபித்து நெருப்பைச் சிந்த; விதிபோல் - தலைவிதியைப்போல. கடந்த லரை – பகைவரை; முயற்சி ஒன்று - தனது முயற்சியால் ஒருசேர வெல்லுகிற, புயல் - மேகம், வாசப் புதுத்தழை - மணத்துடன் புதுமையும் உடைய தழை.

116. மலைப்பால் உறவு உரைத்து – மலையிடத்தே உள்ள உறவுடைய தலைவிக்குச் சொல்லி, அப்போது - அந்தத் தலைவியின் பூப்போன்ற மனத்தை, இப்போது - இச்சமயத்தில், பேய் - பேய்வடிவான பூதகி, சிலைப் பால் அருவி வரை மயில் - மலையில் வழிகின்ற பாலருவியின் பக்கத்திலே உள்ள மயில் போன்ற தலைவி. குயில் - குயில் போன்ற தோழி.

## மெலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தல்
## வலிதாகச் சொல்லி மறுத்தல்

இறைவன் தனக்குக் குறைநேர் பாங்கி
இறைவிக்கு அவன்குறை உணர்த்தல்

செஞ்சரம் போல்விழி கைத்தழை காட்டித்
திகைப்பர்செப்பார்
மஞ்சரங் கென்றெழு மாஞ்சோலை மாரற்கு மன்னுசின்ன
[முஞ்சர மும்பயில் தென்நாடன் சங்கர மூர்த்திநல்லூர்க்]
குஞ்சரம் போல்நம் புனத்தே வருமொரு கொற்றவரே. 117

இறைவி அறியாள் போன்று குறியாக் கூறல்

காடொன்று முண்டகம் நீலம்தண் பானலும் கானலும்சூழ்
ஏடொன்று முண்டகம் நீலமும் நாகமு மேந்துமின்னே!
மூடொன் றிணைமரு தம்சாய்த்த சங்கர மூர்த்திகுட
நாடொன்று மேகுண நாடது போலில்லை
நாடொன்றுமே. 118

பாங்கி இறையோற் கண்டமை பகர்தல்

இன்றைக் கெதிர்ந்தனர் நாமிரு வோரு மிதணினிறை
அன்றைக் கோரானை வினாவிவந் தார்;வல் லரக்கன்நெஞ்சம்
முன்தைக்க வெய்ய சரங்கோலும் சங்கர மூர்த்திநல்லூர்க்
குன்றைக் குறுகிநின் றார்திரு மேனி குழைந்துகொண்டே. 119

---

117. செஞ்சரம் - குருதியால் சிவந்த அம்பு, மஞ்சு - மேகம், அரங்கு - கூத்தாடும் மேடை, மாரற்கு - மன்மதனுக்கு, சின்னம் - (மன்மதனுக்கு) ஊது சின்னமாகிய குயில். சரசம் - சல்லாபம், . குஞ்சரம் - யானை. கொற்றவர் - தலைவன்.

118. காடு ஒன்று முண்டகம் - குழற்காட்டினை அடுத்த நெற்றி; நீலம் - கண்கள், பானல் - வாய், கானல் - பொய்த்தோற்றமளிக்கும் இடுப்பு, ஏடு ஒன்று முண்டகம் - இதழோடுகூடிய தாமரை போன்ற கை. நீலம் - நீலநிற ஆடை, நாகம் - முலை, மூடு - அண்டத்தின் உச்சி முகடு, இணை மருதம் - இரண்டு மருத மரங்கள். குணநாடு - குணம்மிக்க நாடு.

119. எதிர்ந்தனர் - எதிரே வந்தார், இதண் - பரண், இதணின் இறை அன்றைக்கு - பரணில் தங்கி இருந்த அன்றைக்கு, வல் அரக்கன் - இராவணன், தைக்க - உருவிப்பாய, வெய்யசரம் - கொடிய அம்பு, கோலும் - எய்கின்ற.

பாங்கியைத் தலைவி மறைத்தல்

நன்நாள் மலர்த்தழை கொண்டய லாரயல் நண்ணுதல்கண்டு
இன்நாள் மொழிநத் தியல்பல்ல வே;இலங் கேசன்நெஞ்சம்
முன்நாள் மதியின் சிலைவாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
மின்நாணும் நுண்ணிடை யாயென்னை நோக்கியிவ்
வெவ்வுரையே 120

பாங்கி என்னை மறைத்தல் என்எனத் தழால்

விதுமைக் களங்கத் தொடும்தோன்றித் தேய விளங்குமுகப்
பதுமைக்கி ணையனை யாய்!பணி வேற்கும் பழமையின்றி
முதுமைத் தமிழன் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
புதுமைக் குணம்படைத் தன்னோ மறைத்துப்
புகல்கின்றதே. 121

கையுறை புகழ்தல்

பைம்மணிக் கோவை யனையாய்!கொண் டான்கைப்
பணிலமும்மார்பு
அம்மணிக் கோவையும் போலொக்கு மேயணி யக்கம்எனில்
மும்மணிக் கோவை யனைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்
எம்மணிக் கோவை நல்லார முமாரமா மேந்திழையே. 122

---

**120.** அயலார் - தொடர்பில்லாத ஒருவர். அயல் நண்ணுதல்-பக்கத்தில் வருதல், மொழிநத்து இயல்பல்ல - மொழிவது தகுதியன்று. இலங்கேசன் - இராவணன், முந்நாள் மதியின் - மூன்றும் பிறைபோல, முந்நாள் என்பது எதுகைநோக்கி முன்நாள் எனத் திரிந்தது. சிலை வாங்கும் - வில்லை வளைக்கும் வெவ்வுரை மொழிநத்து இயல்பல்ல எனக் கூட்டுக.

**121.** விது - சந்திரன், மைக்களங்கம் - கருமையான களங்கம், பதுமை- பொம்மை, பாவை; மறைத்துப் புகல்கின்றது - ஒளித்துப் பேசுவது.

**122.** பைம்மணிக்கோவை - பாம்பின் படத்தில் உள்ள மணிகளால் செய்த மாலை. கொண்டான் என்றது ஈண்டுத் திருமால். பணிலம் - சங்கு மார்பு அம்மணிக்கோவை - மார்பில் அணிந்த கௌத்துவமணி. நல்லாரமும் ஆரமும், கைப்பணிலமும் மார்பு அம்மணிக் கோவையும் போல்ஒக்கும் என இயைக்க, நல்லமுத்து மாலையும் சந்தனத்தழையும் முறையே வெண்மை நிறத்தால் திருமாலின் கைச்சங்கையும்செம்மை நிறத்தால் கௌத்துவமணியையும் ஒக்கும் என்றுள் தோழி.

கிழவன் துயர்நிலை கிளத்தல்

பிடியும் களிறும் பெடையும்பைந் தோகையும் பின்னிச்சுற்றும்
கொடியும்கொம் புங்கண்ட யர்ந்தார் குறும்பர்
கொடியும்கொற்ற
முடியும் தடியும்கை மாவேந்தன் சங்கர மூர்த்திநல்லூர்
வடியுந்து கூர்விழி! யென்னையும் பார்த்தந்த மன்னவரே. 123

மறுத்தற்கு அருமை மாட்டல்

செப்பும்பொய் யால்மறுத் தற்கரி தேமன்னர் தேம்பிப்பட்ட
கொப்பும் குழையக் குழைந்துநின் றார்நெல்லைக் கூத்தனைமா
முப்புங் கவர்பொரு ளைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்த்
துப்பும் கவிரும் நிகரித ழாய்!வெம் துயர்கண்டுமே. 124

தலைவன்குறிப்பு வேறாதல் நெறிப்படக் கூறல்

அன்றிலெங் கேபறக் கும்;பறந் தாலதற் கன்றிலெங்கே;
துன்றிலெங் கேவரை சீறூரெங் கேமன்று சூழ்ந்திசைக்கும்
முன்றிலெங் கேயென் றுயர்சீர்த்திச் சங்கர மூர்த்திநல்லூர்க்
குன்றிலெங் கேகுவ டும்குறி யேன்மன்னர் கூறியதே. 125

---

123. பிடி - பெண்யானை,களிறு - ஆண்யானை. பெடை - பெண் மயில். பைந்தோகை - ஆண்மயில். அயர்ந்தார் - மனம் களைத்தார். குறும்பர்கொடியும் கொற்றமுடியும் தடியும் - நாட்டிற்குத் தொல்லை தருவோரின் கொடியையும் முடியையும் அழிக்கின்ற. வடியுந்து - கூர்மையாக்கப்பட்ட.

124. தேம்பி - ஒளிகுறைந்து; பட்ட கொப்பும் - பட்டுப்போன மரக்கிளையும்; குழைய - தளிர்க்கும்படி; முப்புங்கவர் பொருளை - பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூன்று மூர்த்திகளாகிய இறைவனை; துப்பும் - பவழமும்; கவிரும் முருக்கம் பூவும், தலைவனின் துயரைக்கண்டு இனிமேல் பொய்கூறி மறுக்க முடியாது என்கிறுள் தோழி.

125. அன்றில் - ஓர் பறவை. ''பனையை வெட்டிவிட்டால் அதில் வாழும் அன்றில் பறவை எங்கே பறந்து செல்லுமோ? அப்படிப் பறந்தால் அன்றைக்குத் தங்கும் இடம் எங்கேயோ? நிலைத்துத் தங்கும் கூடு எங்கேயோ? உங்கள் மலையில் மன்று சூழ்ந்த முன்றில் எங்கே உளது'' என்பதாகவும், ''சங்கரமூர்த்தி நல்லூரில் உள்ள மலையில் சிகரம் எங்கே உள்ளது'' என்பதாகவும் தலைவர் கூறியதன் பொருளை நான் அறியேன்; ஒரு கால் அவரது மனக்குறிப்பு மடலேறுதல் வரைபாய்தல் போன்றதாக இருக்கலாமோ'' என்று தோழி கூறுகிறாள்.

பாங்கி தலைவியை முனிதல்

இக்குற்ற மென்மொழி யிக்குற்றம் தீருனக் கேற்றவராய்
நெக்குற் றுளமுரு கும்பாங்கி யர்க்குரை; நின்மலனை
முக்குற்றம் தீர்ந்த வனைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்
மிக்குற்ற சந்த வனத்தேயுன் உண்மையும் மென்சொலுமே. 126

தலைவி பாங்கிதன்னை முனிதல்

பனிவார் தழைபுனைந் தாலெமர் காண்டொறும் பற்றிலுளம்
கனிவார் கனலெனக் காய்வா ரலரும் கடிசுரும்ப
முனிவார்என் றேத்தும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
குனிவார் சிலைநுத லாய்!முறை யோகுறை கூறுவதே. 127

தலைவி கையுறை ஏற்றல்

காவாய் சிறிதலர் தூற்றுமிப் பூந்தழை கைப்புகலூர்
நாவாய்ப் பெரிதலர் தூற்றவந் தால்,தமிழ் நாவலர்கொண்
மூவாய செங்கைக் கொடையாளி சங்கர மூர்த்திநல்லூர்ப்
பாவாய்! விதிவயம் காண்;நல்கு வாயினிப்
பார்ப்பதென்னே. 128

மெலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தல்
வலிதாகச் சொல்லி மறுத்தல் முற்றும்.

---

126, இக்கு - கரும்பு; இக்குற்றம் தீர்-நான் எடுத்துச் சொன்ன சொல்லாகிய குற்றத்தை ஒதுக்கிவிடு; நெக்கு உற்று - கசிந்து ; நின்மலனை - குற்றமற்ற இறைவனை ; முக்குற்றம் தீர்த்தவனை - காம வெகுளி மயக்கமாகிய மூன்று குற்றமுமற்ற இறைவனை சந்தவனம் - சந்தனக்காடு.

127, பனிவார் தழை - குளிர்ச்சிமிக்க தழை; எமர் - எம்சுற்றத்தார்: கனிவு ஆர்கனல் என - கனிந்து எரியும் நெருப்புப்போல ; காய்வர் - சினங்கொள்வர் அலரும் - ஊரார் தூற்றும் சொல்லும்; கடிதரும் - நம்மை வருத்தும்; குனி வார் சிலை நுதலாய் - வளைந்து நீண்ட வில்லைப்போன்ற நெற்றியையுடைய தோழியே. ''தலைவன் தரும் தழையை அணிந்தால் எம்மவர் கண்டு கோபிப்பார்கள்; ஊரிலும் அலர் எழும். அவ்வனமிருக்க அத்தழையை ஏற்கவில்லை என்று குறை கூறுவது நியாயமோ'' என்கிறாள் தலைவி.

128. காவாய் - காப்பாற்று, அலர்தூற்றும் பூந்தழை - பூக்களைச் சிந்துகிற தழையுடை; நாவாய்ப் பேரலர் - நாவிலே தோன்றும் பெரிய அலர்மொழி. கொண்மூ - மேகம், ''பூவைச்சிந்தும் தழையை நான் கைக் கொண்ட போது ஊரார் நாவிலே தோன்றும் அலர்மொழி எழுந்தால் நீகாப்பாயாக. நம்விதி இப்படியாயிற்று, இனி ஆராய்வதால் என்ன பயன், தயைக் கொடு'' என்கிறாள் தலைவி.

## கூட்டல், கூடல், ஆயங்கூட்டல், வேட்டல்

*இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற்கு உணர்த்தல்*

வையுறை வேல்மன்ன! மையுறை கூந்தல்
மகிழ்வென்சொல்கேன்
செய்யுறை நீல விழியுறை சேர்ந்திடச் சேர்த்தணைத்தாள்
மொய்யுறை பூம்பொய்கை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
கையுறை யேதென்றல் காலுறை யாதழல் காத்ததென்றே. 129

*குறியிடம் கூறல்*

பந்தரும் மாதவி யாம் ; மனை மானும் பளிக்கறை;வா
சந்தரு காவுண்டு யாம்பக லாடிடம், தண்பதும
முந்தரு வும்புகழ் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா
மைந்தரும் மாதரும் காணாது வைக வளந்தருமே. 130

*குறியிடத்து இறைவியைக் கொண்டு சேறல்*

காவிதங் காவி குடைந்தாடி மாமலர் காவில்கொய்வோம்
வாயிதங் கொண்டசெந் தேன்மொழி யாய்!கல்வி
வாணர்தென்னூல்
மூவிதங் கொண்ட தமிழ்தேரும் சங்கர மூர்த்திநல்லூர்த்
தூவிதங் கோதிம முந்தோகை யும்நின்னைச்
சூழ்ந்தேயத்தே. 131

---

129. வை - கூர்மை; வை உறைவேல் - கூர்மை பொருந்திய வேல், மையுறை கூந்தல் - மேகம் போன்ற கூந்தலையுடைய தலைவி, செய் - வயல்; நீலம்-நீலப்பூ, உறை சேர்ந்திட - கண்ணீர் சிந்த, மொய் - நெருக்கம். தென்றல் கால்உறையாது - தென்றற் காற்றுத் தாக்காமல், அழல் காத்தது - காம வெப்பத்தை ஆற்றியது.

130. பதுமமும் - பதுமநிதியும்; தருவும் - கற்பகத் தருவும், வைக - தங்கி இருக்க. ''யாம் பகலில் விளையாடும் இடத்தே பந்தரானது மாதவிக் கொடி படர்ந்த பந்தராகும்; பளிக்கறை மண்டபம் மனையை ஒத்திருக்கும்; நறுமணம் வீசும் சோலையும் அங்கே உண்டு; ஆடவரும் மகளிரும் வந்து காணாதபடி அங்கே தங்கலாம்; எல்லா வளமும் அங்கே உண்டு'' என்று தோழி குறியிடத்தைக் குறிப்பிடுகிறாள்.

131. காவி - குவளைமலர், ஆவி - குளம்; இதம் - சுகம்; மூவிதம் - இயல் இசை நாடகம் என்னும் மூவகை; தூவி - மெல்லிய சிறகு; ஓதிமம் - அன்னம்; தோகை - மயில்.

குறியிடத்து உய்த்து நீங்கல்

நீடலும் சைவல மும்போல் குழலிங்கு நிற்கவெதிர்
நாடலும் நின்கை முகத்தாற்றும் பண்பின்றி நாணிக்கொள்ளும்
மூடலும் விள்ளலும், நல்லூரன் சங்கர மூர்த்திவரைக்
கோடலும் கோகன கப்போதும் வாசக் குவளையுமே. 132

இறையோன் இடத்து எதிர்ப்படுதல்

கொந்தைத் தரித்த குழற்பாரம் தாங்கிக் குழையுமிடை
சந்தைத் தரித்த தனவெற்பும் தாங்கித் தளரவந்தோ
முந்தைத் தமிழன் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பென்
சிந்தைத் திருவிழிக் கோவனத் தூடு திகழ்கின்றதே. 133

இயைதல்

தென்பொருந் தந்தண் மலையம்மெய் பூணலின் செம்பணிலம்
மின்பொரும் தண்தர ளங்கடல் காட்டலால் வெவ்வரக்கன்
முன்பொரும் தந்திரம் தீர்த்தார்த்த சங்கர மூர்த்திநல்லூர்த்
தன்பொருந் தம்புரைந் திம்மா தெனக்குத் தமிழ்தந்ததே. 134

---

*132.* நீடல் - மேகம்; சைவலம் - பாசி; குழல் - கூந்தல்; நிற்க - நின்றருள்க. எதிர் நாடலும் - எதிர்ப்பட்டவுடன்; கோடல் - காந்தட்பூ. கோகனகப்போது - தாமரைப்பூ. "தலைவியே! நின் கைக்கு எதிர் ஆற்றும் பண்பின்றிக் கோடல் நாணிக் கொள்ளும் நின் முகத்திற்கு எதிர் ஆற்றும் பண்பின்றிக் கோகனகப் போது நாணிக் கொள்ளும். எனவே இங்கேயே நிற்க" என்கிறாள் தோழி.

*133.* கொந்து - பூங்கொத்து; கொத்து என்பது எதுகை நோக்கிக் கொந்து என மெலிந்தது; தரித்த - சூடிக்கொண்ட; குழற்பாரம் - கூந்தலின் சுமை; குழையும் - தளரும்; சந்தை - சந்தனத்தை; சிந்தைத் திரு - மனத்தில் இருக்கும் தலைவி; விழிக் கோவனம் - கண்ணாகிய சிறந்த சோலை.

*134.* இப்பாடல் பொருநை யாற்றுக்கும் தலைவிக்கும். சிலேடை. தலைவி மேல் சொல்லுங்கால், "தென் பொருந்து - இனிமை பொருந்திய; அந்தண் மலையம் - அழகிய குளிர்ந்த மலையை ஒத்த நகில்களை; மெய் பூணலின் - தன் மார்பிலே ஏற்றிருத்தலாலும்; செம் பணிலம் - சிவந்த சங்கு போன்ற கழுத்திலே தோன்றுகிற; மின்பொரும் தண் தரளம் - ஒளிவீசும் குளிர்ந்த முத்துப்போன்ற வியர்வைத் துளிகள்; கடல் காட்டலால் - கடல் போன்ற அடிவயிற்றில் சிந்து மாறு செய்தலாலும்; தன் பொருந்தம் புரைந்து - குளிர்ந்த பொருநை ஆற்றை ஒத்து." என்று பொருள் கூற வேண்டும்.

பொருநை யாற்றின் மேல் சொல்லுங்கால்; "தென் பொருந்து - தென்திசையிலே பொருந்திய; அந்தண்மலையம் - அழகிய குளிர்ந்த மலைய மலையானது; மெய் பூணலின் - (பொருநை யாற்றை முத்துமாலையாகத்) தனது உடம்பிலே அணிதலாலும்; செம்பணிலம் - நல்ல சங்குகளையும்; மின்பொரும் தண்தரளம் - ஒளி வீசுகிற குளிர்ந்த முத்துக்களையும்; கடல் காட்டலால்-கீழைக் கடலரசனுக்கு திறையாகக் கொடுத்தலினாலும்" என்று பொருள் கூறவேண்டும். தமிழ் தந்தது - போக இன்பத்தைக் கொடுத்தது.

புகழ்தல்

சிரிப்பேறு கஞ்ச முகத்தாய்!நின் கொங்கைக்குத் தென்னிளம்பூ
விரிப்பேறு கொண்ட குரும்பையொவ் வாமல்தன் மெய்முதிர்ந்து
முரிப்பேற டர்த்த குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
உரிப்பேறி யாவணத் தூடே விலைப்பட் டுடைபட்டதே. *135*

விடுத்தல்

கிளைக்கும் கிளைக்கும் கிளைவாய்க்கும் நாணம் கிளரவின்சொல்
விளைக்கும்பொன் னேயென் மனம்துணை யாய்நெல்லை வேணுவின்கீழ்
முளைக்கும் பரனைப் பணிந்தேத்தும் சங்கர மூர்த்திநல்லூர்
வளைக்கும் சிலைநுத லார்வண்ட லாயம் மருவுகவே. *136*

பாங்கி மெல்லியற் சார்ந்து கையுறை காட்டல்

சந்திப்ப நின்கை யடையாமிக் கோடலம் தண்மலர்மேல்
சிந்திப் பதன்பன்றிக் கோடல்கொ ளேர்கொள்ளும் செந்தமிழ்க்கு
முந்திப் பொழியும் நிதிமாரி சங்கர மூர்த்திநல்லூர்
அந்திப் பிறைநுத லாய்!கொணர்ந் தேன்;கொண் டணிந்துகொள்ளே. *137*

---

*135.* சிரிப்பு ஏறு கஞ்சமுகத்தாய் - புன்னகை பூத்த தாமரை போன்ற முகத்தையுடைய தலைவியே! தென்னிளம் பூ - தென்னை மரத்தின் இளைய பூவினின்று; முரிப்பு ஏறு-வலிமை மிக்க காளைகளை; அடர்த்த-வென்று அடக்கிய; ஆவணம்-கடைவீதி. "தலைவியே! நினது நகிலுக்குத் தென்னம் பூவிலிருந்து விரிந்து எழுந்த குரும்பை ஒவ்வாமல் தோற்றது. பின்னர் மெய் முதிர்ந்து வெல்வோம் என நினைத்து முதிர்ந்தது. முதிர்ந்த காய் பாரையால் உரிக்கப்பட்டும், கடைவீதியில் விற்கப்பட்டும், விலைக்கு வாங்கியோரால் உடைபட்டும் பெரும் அவமானத்துக்கு ஆளாகி விட்டது" என்று தலைவன் தலைவியைப் புகழ்கிறான்.

*136.* கிளைக்கும்-தனது தோழியர் சுற்றத்துக்கும்; கிளைக்கும்-கிளை என்னும் இசைக்கும்; கிளை வாய்க்கும்-கிளியின் பேச்சுக்கும்; வேணுவின் கீழ்-மூங்கிற் புதரின் கீழே; பரனை-சிவனை; ஆயம்-தோழியர் கூட்டம்; மருவுக-சேர்க.

*137.* சந்திப்ப - நேர் வரும் போது; நின் கை அடையாம் கோடல் - நினது கைக்கு ஒப்பான இக் காந்தளின்; சிந்து இப் பதன் பன்றிக் கோடு அல் - சிந்துகின்ற பக்குவம் முதிர்ந்த பன்றியினது கொம்பு அல்ல; தோழி வெண்காந்தளைக் கொண்டுவந்து காட்டி "இது பன்றிக் கொம்பல்ல; நின் கைக்கு ஒப்பான காந்தள் மலரே நான் கொணர்ந்தேன். வாங்கிக்கொள்; அணிந்தும் கொள்" என்றாள்.

*மையுறை கண்ணியைப் பாங்கில் கூட்டல்*

அளையாடும் பாந்தளொப் பாமல்கு லாய்!நின் னகமுவப்பக்
கிளையாடும் காந்தளம் போதுதந் தேன்,செந்நெல்
கீழில்வெள்ளி
முளையாடும் பண்ணைக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
விளையாடும் பண்ணை யிடத்தினி நாம்சென்று மேவுதுமே. **138**

*நீங்கித் தலைவற்கு ஓம்படை சாற்றல்*

மழக்குஞ் சரமன்ன நீமால்;பொன் மாதென மார்பகத்தே
வழக்கும் புதுமைக் கிடைநின் றுளேனுமும் மள்ளர்கிளை
முழக்கும் பழனக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
உழக்கும் துயரெமைத் துன்னாதெந் நாளு முவந்தருளே. **139**

*உலகியல் மேம்பட விருந்து இறை விலக்கல்*

புனைமா விரதரு முண்பரெம் மூரில்பொன் போற்சிவந்த
தினைமாவு மூனும்செந் தேனுமென் றால்செங்கை
செவ்வயிலான்
முனைமாத் தடிந்த வனைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்த்
துனைமா விரத முடையீர்க்கென் னாம்மிகை
சொல்லுவதே. **140**

---

*138.* அளை - பாம்புப் புற்று; பாந்தள் - பாம்பு; பண்ணை - வயல்; விளையாடும் பண்ணை-விளையாடும் மகளிர் கூட்டம்.

*139.* மழக்குஞ்சரம்-இளைமையான யானை; பொன்-திருமகள்; மாது - தலைவி; மள்ளர் கிளை-உழவரின் சுற்றம்; பழனம்-வயல்; உழக்கும்-வருத்தும்; துன்னாது-நெருங்காதபடி; ஓம்படை சாற்றல்-மறவாமையைக் கூறுதல்.

*140.* விருந்து இறை விலக்கல்-விருந்து கூறும் முகமாகத் தலைவனை இரவுக் குறிக்கு வாராதே என விலக்குதல்; புனை-மேம்படுத்திக் கொள்கிற; மா விரதரும்-பெரிய நோன்பு நோற்கிறவரும்; அயிலான்-வேலினால்; முனை மாத்தடிந்தவனை-போர்முனை யிடத்தே மாமர வடிவாய் நின்ற சூரனைக் கொன்ற முருகக் கடவுளை; துனை மா இரதம்-விரைந்து செல்லும் குதிரையும் தேரும்; என்னாம் சொல்லுவது மிகை-என்ன சொல்லக் கிடக்கிறது. ஏதாவது சொல்லின் அது மிகையே யாம்.

பெருந்தகை விருந்து இறை விரும்பல்

திருந்தன்ன மென்நடை யீரின்று நான்பெறுந் தேனுமும்பர்
மருந்தன்ன ஊனுந் தினைமாவும் வாய்த்ததும் வாய்பவள
முருந்தன்ன மூரல்மின் னார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்
விருந்தவர் முன்னரும் வேலவற் குண்டென்பர்
வேட்கில்லையே. *141*

கூட்டல்கூடல் ஆயங்கூட்டல் வேட்டல் முற்றும்
பாங்கியிற் கூட்டம் முற்றும்

## பகற்குறி

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்போது கண்டு இரங்கல்

வெம்மாலை வில்லி வருவான்வா ரானினி வெங்கதிரோன்
நம்மாலை மென்குழ லாயென்சொல் வேன்தமிழ் நாட்டரசர்
மும்மாலை யும்பணி மைமாலை சங்கர மூர்த்திநல்லூர்
செம்மாலை தோன்றத் திருமாலை யொத்தன்பர்
சென்றனரே. *142*

பாங்கி புலம்பல்

நிந்திக்கும் மாமதன் தந்திக்கு மாப்பகை நீள்வதன்றி
அந்திக்கு மாபகை யாகிய தாலின்றும் [ஆணிப்]பொன்னில்
முந்திக்கு மெங்கும் புகழ்கீர்த்தி சங்கர மூர்த்திநல்லூர்
சிந்திக்கு மன்பினர் சென்றார்நின் றாளென் திருந்திழையே.
*143*

---

141. உம்பர்-தேவர்; மருந்து-அமிழ்தம்; முருந்து - மயிலிறகின் அடி; இது பல்லுக்கு உவமை; மூரல்-பற்கள்.

142. வெம் ஆலை வில்லி – விரும்புகின்ற ஆலைக்கரும்பை வில்லாக உடைய மன்மதன். வெம் ஆலை என்பது தனிக்குறில் முன் ஒற்று இரட்டி வெம்மாலை என்றாயிற்று. நம் மாலை - நல்ல பூமாலை அணிந்த. மும்மாலை - மூன்றரசரும் அணிந்த மூன்று மாலைகள். மைமாலை – கருங்குவளைப் பூமாலை. செம்மாலை- செந்நிறமான அந்தி மாலைக்காலம். இச்செய்யுளில் மாலை என்பது திரும்பத் திரும்ப வந்திருப்பதால் இது பின்வரு நிலையணி.

143. நிந்திக்கும் – பழிக்கப்படுகிற. மாமதன் தந்திக்கு - கரிய மன்மதனின் யானையாகிய இருட்டுப் பொழுதுக்கு. ''தலைவர் சென்றார். திருந்திழையாம் தலைவி தனித்து நின்றாள். இனி வரப்போகும் இருட்டாகிய இரவுப் பொழுதுக்குப் பகையாவதேயன்றி இப்போது வந்த அந்திக்காலத்துக்குமா பகையாயிற்று'' என்று தோழி வருந்தினாள்.

தலைவன் நீடத் தலைவி வருந்தல்

பெருகினங் காவில் பிரிந்தார் பொருந்துமுன் பேதையெனது
அருகினங் காதல ரெய்தில ரேவண் டறையச்சிந்தும்
முருகினங் காவி யணிமார்பன் சங்கர மூர்த்திநல்லூர்க்
குருகினங் காள்கொக் கினங்காளென் னாவி குலைகின்றதே
144

தலைவியைப் பாங்கி கழறல்

தராரித மென்பதுண் டோ[சொலாய் நிற்]பிரிந் தார்வரையைப்
புராரி பிரிந்தன்ன பொ'ற்றா மரைப்பொன்னைப்
பூவைவண்ணன்
முராரி வலாரி குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
வராரினி யென்று வருந்தேல் முருந்தன்ன வாள்நகையே
145

தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்

தனியார் துயரங்க ளாற்றுகின் றூர்க்கெதிர் சாற்றல்கொடும்
பனியார் குளிர்தணிப் பார்மதி யோடு பகர்ந்ததொப்பாம்
முனியார்கை மாற்றலர் போர்சாய்த்த சங்கர மூர்த்திநல்லூர்
இனியா ரெனக்கினி யாரினி யார்க்கிங் கியம்புவதே. 146

---

144, பெருகின் – செல்வம் போல, நம்காவில் – நமது சோலையில். வண்டு அறைய – வண்டு ஒலிக்க. முருகின் - மணத்தோடு கூடிய, காவி- குவளைப் பூ; குருகினங்காள் – அன்னப்பறவைகளே! ''என்னொடு கூடுதற்குள் பிரிந்தார் காதலர். அக்காதலர் என்னருகே இன்னும் வரவில்லை. அதனால் என் உயிர் போவதாகின்றது,'' என்று தலைவி வருத்துகிறாள்.

145. இதம் தாரார் - சுகத்தைத் தரமாட்டார். வரையை - மலை பயந்த மகளாகிய உமா தேவியை. புராரி - முப்புரத்தை எரித்த சிவபெருமான். பொன்னை - திருமகளை. பூவை வண்ணன் - காயாம் பூவின் நிறத்தை ஒத்த திருமால். முராரி - முரன் என்ற அரக்கனைக் கொன்ற திருமால். வலாரி-வலன் என்ற அரக்கனைக் கொன்ற இந்திரன். முருந்து - மயிலிறகின் அடி. வாள் நகையே - ஒளி மிக்க பற்களையுடைய தலைவியே. வரை (மகளை)ப் புராரி பிரிந்தன்ன தலைவர் பிரிந்தார் எனவும், பூவைவண்ணன் பொற்றாமரைப் பொன்னைப் பிரிந்தன்ன தலைவர் பிரிந்தார் எனவும் கூட்டுக. முராரியையும் வலாரியையும் ஒத்த சங்கர மூர்த்தி என இயைக்க.

146. முன்னிலைப் புறமொழி – முன்னிற்பாரிடம் கூற வேண்டியதனை அவரை நோக்கிக் கூறாமல் பிறர் ஒருவரை நோக்கிக் கூறுதல். தனியார் - பிரிந்து தனித்து இருப்பார். முனி ஆர்கை மாற்றலர் - வெறுப்பினை மேற்கொண்ட பகைவர். போர் சாய்த்த - போரில் வென்ற. இனியார் என வந்த மூன்றனுள்

இன்னுயிர்ப் பாங்கியொடு பகர்தல்

அறையார் கழல்மன் னவர்பிரி யாமையின் யாழுமம்ம
பறையார் பிரிவும் படைத்தத னாலலை பாய்ந்துமுறை
முறையாரம் சிந்தும் குடநாடான் சங்கர மூர்த்திவெற்பில்
சிறையா ரசுணமொத் தேன்மட வாய்நின்று தேம்புதற்கே. 147

பாங்கி அச்சுறுத்தல்

மேக்குங் கிழக்கும் வடக்கொடு தெற்கும் விளங்கிழைநீ
நோக்குங் கவலைநம் மன்னைகண் டால்வெண் நுரைகரைமேல்
மோக்குந்தண் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
காக்கும் கவலையைக் காவாமல் ஈட்டுங் கவலையையே 148

நீங்கற்கு அருமை தலைவி நினைத்து இரங்கல்

போக்குடைத் தாம்பிரி வாற்றோமென் றன்பு பொருந்தியெட்டு
நோக்குடைக் கேள்வன்தன் நாக்கோயில் கொண்டது நோக்கிலொன்றோ
மூக்குடைக் கைக்குஞ் சரங்காத்த சங்கர மூர்த்திநல்லூர்
வாக்குடைப் பாவை மறுப்போசொன் னாலும் வருத்துமென்றே. 149

---

முதலாவதற்கு ''இனிமை யுடையராக இருந்தவர்'' என்றும், இரண்டாவதற்கு ''இனிக்க மாட்டார்'' என்றும், மூன்றாவதற்கு ''இனிமேல் எவருக்கு'' என்றும் பொருள் கொள்க. ஈற்றடி, மடக்கணி பெற்றுள்ளது.

147. அறையார் கழல்-ஒலிக்கின்ற வீரக்கழல்; ஆரம்-முத்துக்கள்; சிறையார் அசுணம் - சிறகுகளை உடைய அசுணப் பறவை. இப்பறவை யாழோசை கேட்டால் மகிழும்; பறை ஓசை கேட்டால் உயிர்விடும் என்பர் புலவர். ''மன்னவராகிய தலைவர் பிரியாமையினால் யாழோசையின் இனிமையையும், அவர் பிரிவால் பறையோசையின் கொடுமையையும் படைத்தேன். அங்ஙனம் அவற்றைப் படைத்ததனால் அசுணம் ஒத்தேன்'' என்று தலைவி கூறுகிறாள். பறையார் பிரிவும் என்பதனைப் பிரிவார் பறையும் என்று மாற்றி வைத்துப் பொருள் கொள்க. அம்ம-அசைச்சொல்.

148. கவலை-மன வருத்தம். ''தலைவியே நீ மேற்கு முதலான நான்கு திசைகளையும் தலைவர் வருவாரோ என்று பார்க்கின்ற உன் கவலையைத் தாய் அறிவாளாயின், புனங்காக்கும் கவலையை (அக்கரையை) நீக்கிப் புனங்காவாமல் செய்து இற்செறித்து மேலும் உனக்கு மனக்கவலையை ஏற்படுத்துவாள்'' என்று தோழி தலைவியை அச்சுறுத்துகிறாள்.

149. போக்கு உடைத்தாம் பிரிவு-தலைவன் பிரிந்து செல்வதால் தலைவிக்கு உண்டாகும் பிரிவுத்துன்பம்; எட்டு நோக்குடைக் கேள்வன்-எட்டுக் கண்களை உடைய பிரமனாகிய கணவன்; நாக் கோயில் கொண்டது-நாக்கையே இருப்பிட

தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றல்

சேவோசை கொண்ட மணிக்கஞ்சல் நீயன்பர் தேர்த்திகிரி
தாவோசை பாகன் குசையோசை விம்மத் தடமுரச
மூவோசை கொண்ட குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
மாவோசை கண்டை மணியோசை தண்ட வருகின்றதே. 150

பாங்கி சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறுத்தல்

பூத்தன வேங்கை புகுந்தன போலும் புனக்கிளிகள்
நீத்தன வேன லிளமையெல் லாம்வெண்மை நீள்கதிராய்
மூத்தன காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
காத்தன மாலினிக் காவாத காரணம் கண்ணுற்றவே. 151



---

மாகக் கொண்டது; நோக்கில்-ஆராய்ந்தால்; மூக்குடைக் கை-தனது துதிக்கையிலேயே மூக்கையும் பெற்றுள்ள யானை; கராம் – முதலை; மூக்குடைக் கைக்கும் கராம் காத்த என்றது முதலை வாயிலிருந்து யானையைக் காத்த வரலாறு. வாக்குடைப் பாவை–கலைமகள். ''வாக்குடைப் பாவை பிரிவாற்றோம் என்று தனது கேள்வனது நாவைக் கோயிலாக் கொண்டதனை ஆராயின், நாமும் பிரிவு வருத்தும் என்று சொன்னால் பொருந்துமோ பொருந்தாதோ'' என்கிறாள் தலைவி; ஒன்றோ-பொருந்துமோ, மறுப்போ-பொருந்தாதோ.

150. சே-காளை; தேர்த்திகிரி-தேர்ச்சக்கரம், தாவுஓசை-உருளும் ஒலி; குசை ஓசை–குதிரைச் சவுக்கின் ஒலி; முரச மூவோசை - போர் முரசு, மணமுரசு, கொடைமுரசு என்னும் மூன்று முரசங்களின் ஓசை; மாஓசை - குதிரையின் கனைப்பு ஒலி; கண்டைமணி - கழுத்தில் கட்டியமணி; தண்ட - நெருங்க. ''தலைவியே! தலைவனது தேர்ச்சக்கரத்தின் ஓசையும் பாகன் பிடித்த சவுக்கின் ஓசையும் பெருகும்படி குதிரையின் கனைப்பு ஓசையும் அதன் கழுத்து மணி ஓசையும் நம்மை நெருங்கி வருகிறபடியால், காளைகளின் கழுத்து மணிஓசைக்கு நீ அஞ்சாதே'' என்கிறாள் தோழி.

151. ''வேங்கைமரம் பூத்துவிட்டன; கிளிகளும் புகுந்து விட்டன; தினையும் இளமை நீங்கின; வெண்மையான கதிர்களால் முதிர்ச்சி அடைந்து விட்டன. இதுவரை தினைப்புனம் காத்தோம்; இனிமேல் புனம் காவாத காரணம் நெருங்கி விட்டது'' என்கிறாள் தோழி. காவாத காரணம் என்பது இற்செறிப்பாகும்.

பாங்கி முன்னிலைப் புறமொழி மொழிந்து அறிவுறுத்தல்

நத்தினைக் கொண்டகை யாரயர்த் தாலுமென் நண்பயரீர்
இத்தினைக் கேவரும் புள்ளினங் காள்முட்டை யென்று
கொக்கு
முத்தினைப் பார்க்குங் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
கொத்தினைக் கொண்ட[விப்] பூவாசச் சந்த குளிர்வரைக்கே.
**152**

பாங்கி தலைமகற்கு முன்னின்று செறிப்பு அறிவுறுத்தல்

உருகியங் கங்குலை கின்றோம்நம் காவல் ஒழிந்ததின்றே
பெருகியங் சங்கிருந் தோர்குன்ற வாணர் பிணங்கிக்
கொட்டும்
முருகியம் பொங்கப் புனஞ்சேர்ந்த சங்கர மூர்த்தி நல்லூர்க்
குருகியங் கும்குட நாடர் தினைக்குரல் கொய்தல்கண்டே.
**153**

முன்னின்று உணர்த்தி ஓம்படை சாற்றல்

குறவாணர் இற்செறிப் பப்புனத் தேதினைக் கொய்தெமையும்
துறவார் கொடுசெல்லச் செல்லுகின் றோம்மத்தந்
தூங்கருவி
முறவார் தழைசெவி மாவேந்தன் சங்கர மூர்த்திநல்லூர்
மறவா திருமன்ப ரேதமி யேனையும் மானையுமே. **154**

---

*152.* நத்து - சங்கு; நத்தினைக் கொண்டகையார் - சங்கினை ஏந்திய கையினை உடைய திருமாலை ஒத்த தலைவன்; அயர்த்தாலும் - மறந்துவிட்டாலும்; நண்பு அயரீர் - நட்பினை மறவாதீர்; சந்த குளிர்வரை - சந்தன மரம் நிறைந்த குளிர்ந்த மலை.

*153.* குன்ற வாணர் - மலையில் வாழும் குறவர்கள்; பிணங்கி - தம்முள் மாறுபட்டு; முருகு இயம் – முருக வழிபாட்டுக்கு உரிய இசைக் கருவிகள்; குருகு - பறவைகள்; தினைக்குரல் - தினைக்கதிர்; ''குடநாடர் தினைக்கதிரைக் கொய்வதைக் கண்டு மனம் உருகி உடம்பு நடுங்குகிறோம். இன்றோடு தினைப் புனக் காவலும் நின்று விட்டது. (நாங்கள் இற்செறிக்கப் படுவோம்)'' என்று தோழி கூறுகிறாள்.

*154.* ஓம்படை சாற்றல் - மறவாதீர் என்று கூறுதல்; குறவாணர் - குறவர்கள்; இற்செறிப்ப - வீட்டிலே இருக்கும்படிச் செய்ய; துறவார் - விடாதவராய்; கொடு செல்ல - கொண்டு செல்ல; அத்த – தலைவனே, தூங்கருவி - வீழ்கின்ற அருவி; முறவார் தழைசெவிமா - முறம் போன்ற நீண்ட தழைத்த காதுடைய யானை; மானை - மான் போன்ற தலைவியை.

மேம்படுகிழவோன் தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல்

கோன்செய்த வேனலும் கொய்கூ னிரும்பும் குறவர்களும்
பொன்செய்த வேங்கையும் இல்லாதிப் பொன்னைப்
பொருந்துதவம்
முன்செய்தி லேம்நல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
என்செய்து மோநெஞ்ச மேதஞ்ச மேதுநம் மின்னுயிர்க்கே. 155

பகற்குறி முற்றும்.

## பகற்குறி இடையீடு

இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்

வேய்வளை சாரல் தினைவிளை யாமுன் வினைவிளைய
வாய்வளைக் கிள்ளை வளைந்திடு மால்வெண்
வளைகுவளை
மூய்வளைக் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
ஆய்வளை யாயிழை பால்பல கால்வரு மன்னையுமே. 156

இறைவியைக் குறிவரல் விலக்கல்

நாச்செறிந் தான மொழியுஞ்சொல் லாள்நம்மை நாடிநறும்
பூச்செறிந் தார்குழ லாயன்னை பார்வை புரட்டிநெடு
மூச்செறிந் தாளணி நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
ஈச்செறிந் தாடு மிளஞ்சோலை யாகு மிடமல்லவே. 157

---

155. கோன் - பெருமை; ஏனல் - தினை; கூன் இரும்பு - அரிவாள், பொன் செய்த - பொன்போல் பூத்த; பொன்னை - தலைவியை ; தஞ்சம் - புகலிடம்.

156. வேய் வளை - மூங்கில் வேலியாகச் சூழ்ந்த; கிள்ளை - கிளி; வளைந்திடும் - வளைத்துக் கொள்ளும்; வளை - சங்கு; மூய் - மொய்த்து; காயல் - குளம். ''தினை விளைவதற்கு முன் கிளிகளும் சூழ்கின்றன; தலைவியிருக்கும் இடத்துக்கு அன்னை பலமுறையும் வருகிறாள்; எனவே பகலில் வாராதே'' என்கிறாள் தோழி.

157. நாச்செறிந்து ஆன மொழி - நாவால் வாய்விட்டுச் சொல்லும் சொல்; நாடி - தேடி; குழலாய் - தலைவியே, பார்வை புரட்டி - கண்ணால் மிரட்டி நோக்கி; ஈ - தேனீக்கள்.

இறைமகள் ஆடிடம் நோக்கி அழிதல்

கழங்கும் சுழலும் கவணும்பொன் னூசலும் கந்துகமும்
தழங்கும் கலிப்பொழி யும்புனத் தேஎய்திச் சங்கமெங்கும்
முழங்கும் பழனக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
வழங்கும் துயர்கொடு கண்டா ரொடுமன மால்சொல்வரே.
158

பாங்கி ஆடிடம் விடுத்துக் கொண்டு அகறல்

குறைசே ரிருவி களேகுறை யாத குருவிகளே !
அறைசே ரருவி களேசெல்கின் றோமினி யார்வமன்னும்
முறைசேர் நிருபன் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
இறைசேரி லோதுவி ரோவெம் தரக்கெய்து மிவ்வழியே. 159

பின்நோம் நெடுந்தகை குறிவயின் நீடுசென்று இரங்கல்

பதலாளி தம்பெறு பாற்போல் மொழிவேள்
பணிப்பிறைபோல்
நுதலாளி யைவரக் காணேன் மலர்த்திரு நோக்கம்பெற்ற
முதலாளி தென்குட நாடாளி சங்கர மூர்த்திநல்லூர்
புதலாள் இறைபுக லாதிசைப் பீரிசை புள்ளினமே. 160

---

158. ஆடிடம் நோக்கி அழிதல் – விளையாடும் இடத்தை நோக்கிப் பிரிவுக்காக வருந்துதல்; கழங்கு - கழற்சிக்காய்; கந்துகம் - பந்து ; கலிப்பு ஒலியும் – ஒலி நீங்குகிற; மனமால் - மனமயக்கம்; கழங்கு, கவண், ஊஞ்சல், பந்து என்பவற்றின் ஒலி நீங்கிய புனம் என்றது. தலைவி இவற்றைக் கைவிட்டு இல்லம் சென்றாள் என்ற குறிப்பு உணர்த்தும்.

159. குறை சேர் இருவி - வெட்டிக்குறையாய் நிற்கும் தினைத்தாள்கள்; குறையாத குருவி - அளவுமிக்க குருவி; அறை - மலைப்பாறை; முறை - நீதி ; நிருபன் - மன்னன் ; இறை சேரில் - தலைவன் வந்தால் ; தரக்கு - புலி.

160. பதலாளிதம் – சொல் எளிமை ; லளிதம் என்பது எதுகை நோக்கி லாளிதம் என நீண்டது ; பால்போல் மொழி ; நுதலாளி என்பன தலைவியைக் குறிக்கும். வேள்பணி - மன்மதனைப் பணிவிக்கின்ற ; நுதல் - நெற்றி ; புதலாள் - அரும்பைஒத்த இளைய தலைவி ; இறை புகலாது - சொன்னவற்றைக் கூறாமல் ; புள்ளினமே - வண்டுகளே.

வறுங்களம் நாடி மறுகல்

மின்நின் றெனவென் னுயிர்புனங் காத்தல் விலக்கவென்றோ
கொன்நின்ற வேனல்கொய் தார்குன்ற வாணர்;மைக்
குஞ்சரத்தின்
முன்நின்ற மூர்த்தி குடநாடன் சங்கர மூர்த்திவரைப்
பொன்நின்ற பூங்கணி யேகணி யாகப் புனங்களிலே. 161

குறுங்தொடி வாழும்ஊர் நோக்கி மதிமயங்கல்

அத்தலை செல்ல வரிதாமி வள்கொண் டகன்றவென்நெஞ்சு
இத்தலை மீள நினையாது; யானினி என்செல்குவேன்;
முத்தலை பொங்கு குடநாடன் சங்கர மூர்த்திவரைக்
கொத்தலைச் சந்தம் கணிசூழ் குறிஞ்சிக் குறிச்சியிலே. 162

பகற்குறி இடையீடு முற்றும்

## இரவுக்குறி

இறையோன் இருள்குறி வேண்டல்

மைத்தது நேரமென் னூர்தூரம்; மாக்கம் மருண்டது;மா
எய்த்தது; கால்கை யிளைத்தது பாகற் கிடித்திருண்டு
மொய்த்தது மாமுகில்; நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
உய்த்தது தேன்பாலெமையும்மின் னிர் ! விருந் துண்பதற்கே.
163

---

161. வறுங்களம் - தலைவியில்லாத இடம். மறுகல் - மனம்கலங்கல் ; உயிர் - உயிரை ஒத்த தலைவி. விலக்க - நீக்க ; ஏனல் - தினை ; மை - கருமை ; குஞ்சரம் - யானை; பொன்நின்ற பூங்கணி - பொன்போல் பூத்த வேங்கை மரத்தை; கணியாக - சோதிடனாகக் கருதி; வேங்கை மரம் பூத்ததும் தினையை அறுவடை செய்வது குறவரின் வழக்கம். எனவே வேங்கைமரத்தைச் சோதி-னாகக்கொண்டு புனங்களில் குன்றவாணர் ஏனல் கொய்தார் என்கிறான் தலைவன்.

162. அத்தலை - (தலைவி வாழும்) அவ்விடம்; இத்தலை - இவ்விடம்; முத்து அலை பொங்கு - முத்துக்களோடு அலை பொங்கி வருகிற; கொத்தலைச் சந்தம் - பூங் கொத்துக்களை உச்சியிலே உடைய சந்தனமரம் ; கணி - வேங்கை மரம் ; குறிச்சி - மலையில் உள்ள சிற்றூர்.

163. மைத்தது - கருத்தது ; இருண்டது. மார்க்கம் - வழி ; மருண்டது - மயங்கியது; மா எய்த்தது - (தேரிற்பூட்டிய) குதிரை இளைத்துவிட்டது. தேனும் பாலும் விருந்து உண்பதற்காக எம்மை இங்கே விதி உய்த்துள்ளது என்கிறான் தலைவன்.

பாங்கி நெறியினது அருமை கூறல்

பின்காட்டும் நோக்கெண்கும் முன்காட்டும் பார்வைப்
பெரும்புலியும்
கொன்காட்டில் பின்னும்முன் னும்காட்டும் நோக்குடைக்
கோளரியும்
முன்காட்டும் தெவ்வர்க்கு வான்காட்டும் சங்கர மூர்த்திநல்லூர்
மின்காட்டும் வெற்ப! வழிகாட்டும் கங்குலின் மேவரிதே. 164

இறையோன் நெறியினது எளிமை கூறல்

பறிப்புண்ட வாவி மலர்போலென் கையினில் பார்த்தவுடன்
பொறிப்புண்ட ரீகமு மாம்பலும் தேம்பும் புராரிசிலை
முறிப்புண் டிடச்சிறு நாண்பூட்டும் சங்கர மூர்த்திநல்லூர்
நெறிப்புண்ட கோதைநும் சீறூர்க் கெளிது
நெறியெனக்கே. 165

பாங்கி அவன் நாட்டணி இயல் வினாதல்

அந்தழை யும்சுனை யும்புனை சாந்து மணிகலனும்
பைந்தழை யும்தொடை யும்யாது செந்நெல் பணைபவள
முந்தழை யும்குட நாடாளி சங்கர மூர்த்திவரைச்
செந்தழை யைத்தரு வெற்பாநின் நாட்டுறை
செல்வியர்க்கே. 166

---

164. எண்கு - கரடி; கொன் - அச்சம்; கோள் அரி - கொடிய சிங்கம்; முன்காட்டும் தெவ்வர் - புறமுதுகு காட்டாமல் மார்பு காட்டும் பகைவர்; வான்காட்டும் - கொல்லுதலால் வானவர் உலகத்துக்குப் போக்கும்; மின்காட்டும் வெற்ப - மின்னல் மின்னுகிற மலையினை உடைய தலைவனே; கங்குல் - இரவு.

165. வாவி - குளம்; பொறிப்புண்ட - புள்ளிகளை உடைய; புண்டரீகம் - சிறுத்தைப்புலி; ஆம்பல் - யானை; தேம்பும் - வாடும்; புராரி - சிவன்; சிலை - வில்; சிவனதுவில்லை முறியும்படி நாண்பூட்டிய இராமனே சங்கர மூர்த்தி எனக்கொள்க. கோதை - கூந்தலை உடைய தோழியே! கையினில் (உள்ள வேலைப்) பார்த்தவுடன் என்று வருவித்து உரைகொள்க; புண்டரீகம் ஆம்பல் என்னும் மலரின் பெயர்கள் தொனிப்பொருளாகத் தோன்றும்படி பாடப் பட்டிருப்பதால் இது தொனி அலங்காரம்.

166, அந்தழையும் சுனை - அழகாகக் குவளை முதலியன தழைத்த சுனை; பைந்தழை - பசிய தழை உடை; தொடை - பூமாலை; பணை - வயல்.

கிழவோன் அவள் நாட்டணி இயல் வினாதல்

இத்திசை யென்பதி யாதோ வறியினு மெங்குடநாட்டு
அத்திசை நீவந்து காண்பைகொல் லோ?நெல் லளப்பதொரு
முத்திசை யுங்குட நாடாளி சங்கர மூர்த்திவெற்பில்
ஒத்திசை மாங்குயில் நின்னாட் டணியிய லோதுகவே. 167

இறைவற்குத் தன்நாட்டணி இயல் பாங்கி சாற்றல்

சுனைகுடை யாரம்மென் சாந்து;விண் டாரம் தொடை;யளிபூ
நனைகுடை மாந்தழை யாடை;செங் காந்தள்,நண்
ணார் நடுங்க
முனைகுடை வெள்ளிலை வேலேந்தும் சங்கர மூர்த்திநல்லூர்ப்
புனைகுடை யாய்குற்ற சூட்டெங்கள் நாட்டுறை
பூவையர்க்கே. 168

இறைவிக்கு இறையோன் குறி அறிவுறுத்தல்

விழிக்கும் தனத்துக்கும் நின்னால் பயப்பட்டு விண்டுகண்ணீர்
வழிக்கும் குவளையும் வாய்திற வாத வனசமுந்தே
மொழிக்குங் குமமுலை யார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்ச்
சுழிக்கும் சினையுந்தி யாய்!வெற்பர் காண்பது
சொல்லினரே. 169

---

167. இத்திசை என்பது யாது - இதனைக்கூறு என்று கேட்பதனால் யாது பயன். காண்பையோ; மாங்குயில் - மாமரத்தில் வாழும் குயில் போன்ற தோழியே!

168. சுனைகுடை ஆரம் - சுனையில் விழ்ந்து ஊருகின்ற சந்தனம்; விண்டு ஆரம் - மூங்கிலில் பிறந்த முத்து; தொடை - மாலை; அளி - வண்டு; நனை - அரும்பு; வெள்ளிலைவேல் - வெண்மையான இலைபோன்ற வேல்; புனை குடையாய் - அலங்கரித்த குடை ஏந்திய தலைவனே; குற்ற - பறித்த; சூட்டு - தலையிற்சூடும்பூ.

169. "தலைவியே! நின் கண்ணுக்குப் பயப்பட்டுக் கண்ணீர் வழிக்கும் குவளைப்பூவையும்; நின் நகிலுக்குப் பயப்பட்டு வாய்திறவாமல் இதழ்மூடிய தாமரைப் பூவையும் காணவேண்டும் என்று தலைவர் சொன்னார். (அதாவது இக்காட்சி காணத்தக்க இரவுக் காலத்தில் வருவேன் என்று தலைவர் சொன்னார்" என்று தோழி கூறினாள். தனம் - நகில்; வனசம் - தாமரை; சுனை உந்தியாய் - சுனையைப்போல் வட்டவடிவான கொப்பூழை உடைய தலைவியே; வெற்பர் - தலைவர்.

நேராது இறைவி நெஞ்சொடு கிளத்தல்

நடுக்கரந் தாண்மடங் கல்லாறு துஞ்சும்;மின் நங்கைநெஞ்சே;
மடுக்கரந் தூரு மிடங்கரொான் [றோ]விருள் மாசுணஞ்சூழ்
முடுக்கரன் றோ!நம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
மிடுக்கரென் றாலும் வரைநெறி யோவர வேண்டினளே. 170

நேரிழை பாங்கியோடு நேர்ந்து உரைத்தல்

ஒருகன்ன லோர்கண மாய்த்தனி யேவிரு ளூற்றதுகேட்டு
இருகன்ன மும்குளிர்ந் துங்கொதி யாநிற்கு மென்மனங்காண்
முருகன்ன கேள்வர் பெருங்கேண்மை சங்கர மூர்த்திநல்லூர்
வருகன்னல் மென்மொழி யாய்!இனி நானென்
மறுப்பதுவே. 171

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்கு உரைத்தல்

மாப்பழ குங்குயி லிவ்விர வூடும் வரவிசைய
நாப்பழ குஞ்சொ லிசைத்ததெல் லாமிரு நல்நிதிகொண்
மூப்பழ குங்கொடை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா!
பாப்பழ குந்தமிழ் நாவல ராலும் பகர்வரிதே. 172

குறியிடை நிறீஇத் தாய்துயில் அறிதல்

வெம்மத மான்மத மாகொங்கை யாளே! விளங்குளையார்
தெம்மத மாது மதன்மாவைச் சீறிய செங்கண்வேங்கை
மும்மத மாநம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
அம்மத மாலம் பசும்பிண்டி யாமென் றசைக்கின்றதே. 173

---

170. நடுக்கரந்து - காட்டின் நடுவே மறைந்து: மடங்கல் - சிங்கம். ஆறு துஞ்சும் - வழிகளில் தூங்கும்; நங்கை நெஞ்சு மின் - தோழியின் மனம் மின்னல் போல் கொடிது. மடுக்கரந்து - ஆற்றின் மடுவிலே மறைந்து; ஊரும் - தவழ்ந்து செல்லும்; இடங்கர் - முதலை; மாசுணம் - பாம்பு; முடுக்கர் - அருமையானவழி.

171. கன்னல் - நாழிகை. இருள் உற்றது கேட்டு - இருளில் தலைவர் வந்தார் என்பதைக் கேட்டு. முருகன்ன – முருகனைப் போன்ற. கேள்வர் – நட்பினர். கேண்மை - நட்பு. கன்னல் மொழியாய் – கரும்பைப் போன்ற இனிய மொழி பேசும் தோழியே.

172. மாப்பழகும் குயில் - மாமரத்தில் வாழும் குயில் போன்ற தலைவி. இருநல்நிதி – சங்கநிதி. பதுமநிதி. கொண்மூப் பழகும் - மேகம் போன்ற. குயில் வரவு இசைய இசைந்தது எல்லாம் நாவலராலும் பகர்வு அரிது என முடிக்க.

173 வெம் – விரும்பத்தக்க. மதமான் மதம் - கஸ்தூரி மானின் மதம் தடவிய; மா கொங்கை – பருத்த நகில். விளங்குளை - சிறந்த பிடரி மயிர்; தெம்மத மாது – கொற்றவை; (அவள் ஏறிய) மதன்மா - சிங்கம்; மும்மத மா – யானை; தமாலம் - தமாலத்தின் தழையை; பிண்டி என்று – அசோகந்தழை என்று கருதி.

இறைவிக்கு இறைவன் வரவு அறிவுறுத்தல்

அஞ்சே றுலவிரு ளாம்நெறி வல்லுனக் காகநம்மூர்
மஞ்சேறு வெற்பில்வந் தார்;மதுச் சோலையும் வன்பழன
முஞ்சேறு செய்த குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பஞ்சேறு சிறடி! விஞ்சேறு போல்நடைப் பார்த்திபரே. 174

அவட் கொண்டு சேறல்

போதுகம் வாமயி லேகுயி லேகிளி பூவையுடன்
ஓதுகம் வாநல்ல வார்த்தையெல் லாமிவ் வுகத்தில்மனு
மூதுகம் வாய்ப்பப் புவிகாக்கும் சங்கர மூர்த்திநல்லூர்த்
தாதுகம் வார்சுனைப் பூஞ்சோலை வெற்பர்
தமக்கெதிரே. 175

குறிஉய்த்து அகறல்

மகிழிக்கு வேளும் தடுமாற ஓலையை வள்ளையில்பாய்ந்
துகிழிக்குந் நின்கண்கள் கண்டால் குவளை
யொடுங்கும்மின்னே
முகிழிக்கு மெங்கள் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
நெகிழிக் குருகலர் தேன்சோருந் தண்பந்தர் நின்றருளே. 176

---

174. சேறு உலவு நெறி, இருளாம் நெறி எனக்கூட்டுக. வல் - விரைவாக. மஞ்சு – மேகம்; வெற்பு - மலை; பழனம் – வயல்; பஞ்சேறு சிறடி – செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய சிறிய கால்களை உடைய தலைவியே; விஞ்சு - மேம்பட்ட; பார்த்திபரே - அரசரை ஒத்த தலைவர்.

175. போதுகம் வா - போவோம் வருக; மயிலே - மயில் போன்ற தலைவி; பூவை - நாகணவாய்ப் பறவை. இவ் உகத்தில் – இந்தக் கலியுகத்தில், மூது உகம் – பழைய முதல் உகமான கிரேதாயுகம்; வெற்பர் தமக்கு எதிரே போதுகம் வாஎனக் கூட்டுக. இது பூட்டுவில் பொருள்கோள்

176. இக்கு – கரும்பு; வேளும் - மன்மதனும்; ஓலை – காதணி; வள்ளையில் - வள்ளைக் கொடி போன்ற காதில்; கண்கள், காதுவரை நீண்டு காதணியை எதிர்க்கும் என்பது புலவர் மரபு; மின்னே – மின்னல் போன்ற தலைவியே முகிழிக்கும் - (இரக்கத்தால் மனம்) குவியும்; நெகிழிக்கு உருகு அலர் - காற்சிலம் புக்கு உருகிச் சிந்துகின்ற அசோக மரத்தின்பூ; பெண்கள் காலால் உதைத்தால் அசோகமரம் மலர் சிந்தும் என்பது புலவர் மரபு.

வண்டுறை தாரோன் வந்து எதிர்ப்படுதல்

அங்கய னார்க்குமுண் டேக திரேனை யவனடத்த
பங்கய மாளிகை யார்திறந் தார்?பணி லம்பழன
முங்கய முஞ்செறி நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
செங்கயல் நேர்விழி யாய்!மொழி யாய்செறி கங்குலிலே. 177

பெருமகள் ஆற்றினது அருமை நினைந்து இரங்கல்

திடத்தாறு தேரவொண் ணாக்கங்கு லூடெம் சிலம்பிலிபக்
கடத்தாறு சூரலம் கான்யாறு நீந்தக் கதலியெல்லாம்
முடத்தாறு சாய்க்கும் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
இடத்தா றொருவித் தனிவந்த வா!வள்ள
லென்பொருட்டே. 178

புரவலன் தேற்றல்

ஊன்றுங்கை வேல்கொண் டிகல்தீர்த்தே னுள்ளத்
தொருவிளக்கெஞ்
ஞான்றுஞ் சுடர்வதென் முன்னா; இயலிசை நாடகமாம்
மூன்றுந் தெளிந்த நெறியாளி சங்கர மூர்த்திநல்லூர்த்
தோன்றுங் கிரிசெயும் மையிரு ளேது சுடர்த்தொடியே. 179

---

177. கயனார் - கயரோகமுடைய சந்திரன்; ஏனையவன் - மற்றவனாகிய சூரியன்; பங்கய மாளிகை - தாமரைப் பூவாகிய வீடு; பணிலம் - சங்கு. ''இரவில் தாமரை வீட்டைத் திறக்க சந்திரனுக்கு ஒளி உண்டோ. அங்ஙனமாகச் சூரியன் மூடிவிட்டுச் சென்ற தாமரை வீட்டை யார் திறந்தார்'' என்கிறான் தலைவன். கங்குல் – இரவு. தலைவியைத் திருமகளாகக் கூறுவது புலவர் மரபாகலின், தலைவியின் வீட்டைத் தாமரைப்பூ என்கிறான் தலைவன்,

178. திடத்து – மனத்திடத்தால்; ஆறுதேர ஒண்ணா – வழியைத் தேட முடியாத; கங்குலூடு-இரவிலே; இபம்-யானை; கடத்து ஆறு-மதநீர் ஓடும் வழி; சூரல் அம் கான் யாறு-சுழித்து ஓடும் காட்டாறு; கதலி – வாழை; முடத்தாறு – வளைந்த குலை; சாய்க்கும்-மிகுதியாக ஈனுகிற; ஒருவி - நீங்கி; வந்தவா-வந்தது என்ன வியப்போ, வள்ளல்–தலைவன்.

179. இகல் - பகை; உள்ளத்து ஒரு விளக்கு - உள்ளத்தில் இருக்கும் தலைவியாகிய விளக்கு; கிரி செயும் - துன்பம் செய்கிற; மை - கருமை; கிரிசெயும் இருள், மைஇருள் எனக்கூட்டுக.

புணர்தல்

முற்றின்பம் கொண்டறி யாரொரு பேரின்ப முண்டெனநூல்
பற்றின்ப மன்றிப் பயின்றறி யாரேனல் பைந்தொடிசேர்
முற்றின்பம் போலக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சிற்றின்ப மேநல்கும் மெய்வாய்கண் மூக்குச் செவிக்கின்பமே.
180

புகழ்தல்

தொல்லைப்பொற் றாமரை யுங்கரி மாரியுஞ் சூழ்கிளையும்
வல்லைப்பொற் பார்செப்பை யொப்பான கொங்கைதாம் வாய்த்ததனால்
முல்லைப்பொற் பார்நகை யார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்
நெல்லைப்பொற் பார்பதி யீதோவென் றுள்ளம் நினைக்கின்றதே 181

இறைமகள் இறைவனைக் குறிவரல் விலக்கல்

அருள்தீர்ந் தவர்மனம் போலொன்று கூறிலொன் றாகிமுற்றாப்
பொருள்தீர்ந்த புன்கவி போலெங்க ளூர்க்குப் புயல்கிழிய
முருள்தீர்ந் திழுகுங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
இருள்திர்ந் திடாத்தடஞ் சாரலில் வாரலிங் கென்பொருட்டே
182

---

180. முற்றின்பம் - ஐம்புலனாலும் ஆரத்துய்க்கும் இன்பம். பேரின்பம் - மோக்ஷ இன்பம்; ஏனல் பைந்தொடி - தினைகாத்த தலைவி; முழுமை இன்பத்தை அறியாத உலகவர், பேரின்பம் ஒன்று உண்டு என்று நூல்களைக் கொண்டு படித் தறிவார்களேயன்றி அதனை நுகர்ந்து அறிய மாட்டார்கள். ஆனால் தினை காக்கும் தலைவியைச் சேர்ந்த சிற்றின்பமே முழுமையான மோக்ஷ இன்பத்தைப் போல மெய் முதலிய ஐம்புலனுக்கும் இன்பம் நல்கும் என்று தலைவன் கூறுகிறான்.

181. தொல்லை - பழமை; கரிமாரி - கருத்த மேகம்; கிளை - கிளிகள்; வல் - சூதாடுகருவி, செப்பு - சிமிழ்; வல்லும் செப்பும் முலைக்கு உவமை. பொற்பு - அழகு; கொங்கை-நகிலை உடைய தலைவி. நெல்லை-திருநெல்வேலி, நெல்லை மாநகர் பொற்றாமரைக் குளமும் கரிமாரி எ்ற தேவதையும் சூழ்ந்த மக்களினம் வாய்த்திருப்பது போலத் தலைவியும் பொற்றாமரை போன்ற முகமும் கரிமாரி போன்ற கூந்தலும் கிளைபோன்ற பேச்சும் வாய்த்திருக்கிறாள். எனவே நெல்லை மாநகரம் இத்தலைவிதானோ என்று என் உள்ளம் நினைக் கிறது என்கிறான் தலைவன். இப்பாட்டின் முதல் அடி நெல்லை நகர்க்கும் தலைவிக்கும் சிலேடை.

182. அருள் தீர்ந்தவர் - இரக்க மற்றகொடியவர். ஒன்று கூறில் - ஒன்ருகி முற்ருப் புன்கவி, பொருள் தீர்ந்த புன்கவி என இயைக்க. அருள்

அவன் இறைவியை இல்வயின் விடுத்தல்

உட்புறத் தல்லி புறப்புல்லி மாமதி ளொண்கதவம்
புட்புறத் தேறும் தழப்பொகுட் டாசனம் [பொ]ற்பவொரு
முட்புறத் தாள்பெற் றுனைக்கீர்த்திச் சங்கர மூர்த்திநல்லூர்
நட்புறப் பெற்ற மனைத்தேடும் நங்கை நடந்தருளே. *183*

இறைவியை எய்திய பாங்கி கையுறை காட்டல்

வந்தேன்வந் தேன்தனி யேவருந் தேல்நின் மனம்மகிழத்
தந்தேன் குவளைசெங் காந்தளும் வேழமும் தண்பதும
மும்தேன் பொழியும் குடநாடன் சங்கர மூர்த்திவரைச்
செந்தேன் மொழிக்கரு [சேல்வி]ழி யாய்நின் செறிகுழற்கே.
*184*

இற்கொண்டு ஏகல்

நொய்தாய நின்னிடை போல்மறை தேய்ந்து நுணுகிக்கங்கை
மெய்தாய வண்ணம் மறைந்திடும் மேற்றுன்பம் மேவுந்துயில்
மொய்தா யுணரில் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
[எய்]தாய் மடமயி லேகுயி லேநம தில்லிடத்தே. *185*

---

நீர்ந்தவர் மனம்போலவும், புன்கவி போலவும் இருள் நீர்த்திடாத் தாம் என இயைக்க. மேகம் கிழிந்து மழை பெய்ய கரடு முருடு நீர்ந்து நிலத்தில் நிர் ஓடும் குடநாடு என்க. தடம் - வழி, வாரல் - வாரதோ.

183. அல்லி - அகஇதழ். புல்லி – புறஇதழ். புள் - வண்டு. முள் புறத்தாள் - முள்ளைப் புறத்தே உடையதண்டு, முள்ளை உடைய தாழ்ப் பாள்; இது சிலேடை. மனை - தாமரைப் பூவாகிய வீடு. அல்லியே மதிளாகவும், புல்லியே கதவமாகவும் பொகுட்டே ஆசனமாகவும் முள்ளே தாழ்ப்பாளாகவும் பெற்ற தாமரை யாகிய வீடு என இயைக்க. தலைவியைத் திருமகளாகக் கூறும் மரபு பற்றித் தலைவியின் வீட்டைத் தாமரைப் பூவாக வைத்துத் தலைவன் பேசுகிறுன்.

184. வேழம் - கரும்பு. பதுமம் - தாமரை. ''இதோ வந்து விட்டேன்; வருந்தாதே: நின்குழலுக்கு அணியக்குவளை தந்தேன்'' என்கிருள் தோழி.

185. நொய்தாய - மெல்லிதான. மறை - களவொழுக்கம். கங்கை மெய் தாய வண்ணம் - கங்கைநதி சிவனது மெய்யில் பாய்ந்து அவன் சடையில் மறைந்து போன தன்மை போல. துயில் மொய் தாய் உணரில் - தூக்கம் நிறைந்த தாய் விழித்துக் கொண்டால். தாய் உணரில் மறை மறைந்திடும், அதன் மேலும் துன்பம் மேவும் ஆகவே இல்லிடத்துக்கு எய்தாய் என இயைக்க.

பிற்சென்று இறைவனை வரவு விலக்கல்

வாழலங் காண்மன் மனைபுண்ட ரீகம் வணமுளரி
சூழலங் கானவ ரன்னையுந் தாமரை துன்னலரை
மூழலங் கான்புக வில்வாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
ஞாழலங் கானல் குடநாட நீயினி நண்ணிடலே. 186

பெருமகன் மயங்கல்

ஈதலை நன்னிதி வைத்திசை யாரினங் கெய்தலையென்று
ஓதலை யேதலை யாயுரைத் தாய்சங் கொலித்தலைமேல்
மோதலைச் சிந்துங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சூதலை கொங்கைநல் லாயென்செய் வேனுயிர்
சோர்வதற்கே. 187

தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தல்

வெறிக்குங்கண் வெம்புலி சூழ்கானத் தல்வழி வேற்றுமையில்
செறிக்குந் துயரங்கொள் ளாதய்ய நீயெய்தின் திண்தறியை
முறிக்குங்கொல் யானை அனபாயன் சங்கர மூர்த்திநல்லூர்
குறிக்குங்கொம் பாலிரு கொம்பர் முலை[தாங்கும்]
கொம்புய்யுமே.
188

---

186. மன் - மன்னனாகிய தலைலனே! மனை - வீடு; புண்டரீகம் - தாமரை. வணம் - நிறம். முளரி – தாமரை, முள்ளைஉடையபன்றி. தாமரை-தாமரைப்பூ, தாவும் மான். துன்னலர் - பகைவர். ஞாழல் - புலி நகக் கொன்றை. மனை புண்டரீகம் என்பதால், வீடு இரவில் மூடி இருக்கும் என்பதும், கானவர் முள் அரி என்பதால் பெற்ரோர் கொடியவர் என்பதும், அன்னையும் தாமரை என்ப தால் தலைவி மான் போன்ற மருட்சி உடையவள் என்பதும் குறிப்பால் உணர்த்தித் தலைவனை நண்ணாதே என்று தோழி வரவு விலக்கினாள்.

187. நன்னிதி - நல்ல செல்வம். இசையாரின் - கொடுக்காதவர் போல சூது - சூதாடு கருவி. "நிதியம் பெற்றும் கொடுக்காதவர்களைப் போல என்னை எய்தாதே என்று விலக்குகிறாய்; என் உயிர் சோர்கிறது; இதற்கு என்ன செய்வேன்" என்கிறான் தலைவன்.

188. வெறிக்கும் - சினந்து பார்க்கும். அல் வழி - இரவில் வரும் வழி. தறி - யானை காட்டும் தூண். குறிக்கும் கொம்பால் - ஊதுகின்ற குழல் ஓசை யால்; கொம்பர் முலை - யானைத் தந்தம் போன்ற முலை; கொம்பு - பூங்கொம்பு போன்ற தலைவி; உய்யுமோ - பிழைப்பாளோ.

திருமகள் புணர்ந்தவன் சேறல்

மழைவா ளெனமின்னு மென்னூர் புகுமட்டும் [வல்லி]யென்னக்
குழைவா ளெனக்கரு கேவரு வாளவள் கூடவந்தால்
முழைவா ளரியன்ன நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
இழைவா ளிடுங்குழை வில்லிடும் ; பார்வை இடுஞ்சரமே 189

இரவுக்குறி முற்றும்

## இரவுக்குறி இடையீடு
## அல்லகுறி

இறைவிக்கு இகுளை இறை வரவு உணர்த்தல்

திரண்டங்கு மிங்குஞ் செறிந்தெழும் பூண்முலைச் செந்திருவே
[கரண்]டங் குலாவும் கழிச்சூழல் ஞாழலில் கைதையின்மேல்
முரண்டங்கும் மாற்றலர் போர்சாய்த்த சங்கர மூர்த்திநல்லூர்
[குரண்]டங்க ளென்னைகொல் லோதுயி லாதுகு
மீஇக்கொண்டதே. 190

தான் குறி மருண்டமை தலைவி அவட்கு இயம்பல்

கொன்குறி யாய்க்குறிக் கும்கா ரியமின்றிக் கூரிருள்வாய்ப்
பின்குறி யான்மருண் டேன்மரு வார்பின் பெயர்த்த[வின்றி]
முன்குறி யாநின் றமராடும் சங்கர மூர்த்திநல்லூர்
மன்குறி யார்செய் திடக்குறித் தாரவர் மைக்கண்ணியே. 191

---

189. வல்லி - கொடி; முழை - குகை; அரி – சிங்கம்; குழை - காதணி; வில்லிடும் - ஒளி வீசும்; வில்லை வளைக்கும். பார்வை இடும் சரம் - கண்கள் அம்பு போலும்.

190. கரண்டம் - முதலை, குரண்டம் - கொக்கு. ''கழிச்சூழலில் உள்ள ஞாழல் மரத்தின் மேலும் கைதை (தாழை) மரத்தின் மேலும் வாழும் கொக்குகள் துயிலாது கூட்டம் கூடி ஒலிப்பது ஏன்'' என்று வினாவும் வாயிலாகத் தலைவன் வந்துவிட்டான் என்பதை குறிப்பால் உணர்த்துகிறாள் தோழி.

191. கொன்குறியாய் – பயன் உடைய குறிக்கோளாக; கூர் இருள் - மிக்க இருள்; குறி மருண்டேன் - ஒரு அடையாளத்தை வேறொன்றாக மயங்கினேன்; மருவார் - பகைவர்; பின் பெயர்த்தல் - பின்னுக்குச் செல்லுதல்; முன் குறியா - மார்பைக் குறியாக வைத்து; குறியார் செய்திடக்குறித்தார் - குறிப்பில்லாதவரும் செய்யும்படி ஒரு அடையாளத்தை நமக்குச் சொன்னார்.

பாங்கி தலைவன்தீங்கு எடுத்துஇயம்பல்

குறிபொய்த் திடார்குறி பொய்த்தா ரதனைக் குறிப்பதென்நூல்
நெறிபொய்த் திடாததும் பொய்க்குமன் றோபுனை
நீள்பொதும்பர்
முறிபொய்த் திடாத குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
கறிபொய்த் திடாத தடஞ்சாரல் வெற்பர் கயற்கண்ணியே.
*192*

புலந்து அவன் போகல்

நரம்பேறு யாழ்மொழி கொங்கைவெற் [பாக] நயந்தொப்பீர்
பிரம்பேறு கான்புகுந் தாற்றூ டிறங்கியிப் பேரிருள்வாய்
முரம்பேற வோமான மெய்க்கீர்த்தி சங்கர மூர்த்திநல்லூர்
வரம்பேறு சாலிக் குடநாடு விட்டிங்கு வந்தனமே. *193*

புலர்ந்த பின் வறுங்களம் தலைவி கண்டு இரங்கல்

கல்லான தைப்பண்டு காலால்பெண் ணாக்கினர்
கைக்கொடிந்நாள்
புல்லான தைப்பெண் ணுருவாக்கி னார்நின் புனைந்தலவோ
முல்லாய்சொல் லாய்நம் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
வல்லாரெல் லாரு மிசைபெண்ணை நேருஞ்சொல்
வாய்த்திடவே. *194*

---

*192.* குறி பொய்த்திடார் - எய்யும் குறி தப்பாத தலைவர். குறி பொய்த்தார் - நமக்குச் செய்யும் அடையாளத்தில் தவறிவிட்டார், நூல்நெறி பொய்த்திடாததும் பொய்க்கும் அன்றே - தருமநூலின் விதிதவராதவர்களும் ஒரோவழி தவறக்கூடும் அல்லவா. பொதும்பர் - சோலை. முறி - தளிர்; கறி – மிளகு.

*193.* நரம்பு ஏறு யாழ் - நரம்புகட்டிய யாழ்; முரம்பு - மேட்டு நிலம்; சாலி-நெல்: யாழிசையே மொழியாகவும் வெற்பே கொங்கையாகவும் விரும்பியதைப் போல்வீர்.

*194.* கல்லானதை - கல் உருவமான அகலிகையை; புல்லானதை - புல்வகை. யைச் சேர்ந்த பனைமரத்தை, முல்லாய் - கற்புடையவளே! இசை - சொல்கின்ற, பெண்ணை - பனைமரம்; ''பனைமரமாகிய கற்புடையவளே! எல்லாரும் சொல்கின்ற பெண்ணை என்று சொல்லும் சொல் உனக்கு வாய்க்கும்படி, உன்னை அலங்கரித்தால் உன்னையும் ஓர் பெண் வடிவாக்கிவிட்டார்'' என்கிறுள் தலைவி,

### தன் துணைக்கு உரைத்தல்

குடைகாட்டுந் தண்மதி யன்னிடை நாட்டும் கொடுங்கணையைக்
கடைகாட்டும் பின்பெய ரேற்றது வேற்றவில் காளிக்
கொன்னார்
முடைகாட்டும் வேலன் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
தடைகாட்டி னார்நென்ன லுற்றன ரேயிங்குத் தாழ்குழலே. 195

### தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்

தண்ணார் புகலிப் பிரானம்பின் [விட்ட] தமிழ்[ப்பதிகப்]
பண்ணான தேற்றது பெண்ணை மதுரையில் பின்னும்பைந்தண்
முன்னாலிப் பூம்பொய்கை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
என்னால் வளர்[டெண்ணை] யேற்றதும் ஏடெதி ரேற்றதுமே.
196

### இறைவன்மேல் பாங்கி குறிபிழைப்பு ஏற்றல்

செம்மூர்த்தி யாங்குகன் போல்வீர் யெமைத்துயர்ச் சிங்கியிலிட்டு
எம்மூர்த் திசையினு மெய்தீர்சொல் லீர்நெல்லை ஈசனைமா
மும்மூர்த்தி யானவ னைப்போற்றும் சங்கர
மூர்த்திநல்லூர்க்
கும்மூர்த் திசையெங் கறியோ வருதற்கும் முன்னினமே. 197

---

195. குடை காட்டும் தண் மதியன் - குளிர்ந்த சந்திரனைக் குடையாகப் பிடிக்கும் மன்மதன். இடை நாட்டும் கொடுங்கணை-மன்மதனின் ஐந்து அம்புகளில் நடுநின்ற ''மா'' என்னும் அம்பு. கடை காட்டும் பின்பெயர் ஏற்றது - மா என்பதை ஈற்றில் காணப்படும் பின் பெயராகக் கொண்ட ''அரிமா'' என்பதை. ஏற்ற-அரிமாவை வாகனமாக ஏற்ற. ஒன்னார்-பகைவர். முடை-புலால் நாற்றம். தடை-தடையும், அடையாளம். தடை காட்டியிருப்பதால் நேற்று அவர் வந்திருக்க வேண்டும் என்கிறாள் தலைவி.

196. புகலிப் பிரான் - ஞானசம்பந்தர். அம்பின் விட்ட - தண்ணீரில் இட்ட. பதிகப் பண்ணானாது ஏற்ற பெண்ணை-பதிகம் எழுதப்பட்டது பனை மரத்தின் ஓலையிலாகும். ஆலி-நீர், பெண்ணை - பனைமரம்.

197. செம்மூர்த்தியாம் குகன்-சிவந்த நிறமுடையவனான முருகன், சிங்கி - வலை, நெல்லை ஈசன்-திருநெல்வேலியில் உள்ள சிவபெருமான்-மும்மூர்த்தி; பிரம்மா, விஷ்ணு, சிவன்.

### இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பு ஏற்றல்

சூதிரங் காநிற்ப வென்றகொங் காய்இந்தச் சோலையில்நும்
மாதிரங் காதது மாத்திர மேயின்றி மாருதியென்
மோதிரம் காணென்ற நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
ஈதிரங் காதீ ரிரவூடு நாடுமென் னின்னல்கண்டே. 198

குறிமருண்டமை அவள் அவற்கு இயம்பல்

பொன்னியல் நேர்நிரை யேநிரை போலும் புணர்முலையாள்
உன்[னியல் வண்டுகள்] காவியி லேதாது முண்சுனைக்கே
முன்னியல் நேர்நிரை பின்போன சங்கர மூர்த்திநல்லூர்
மின்னியல் வேலவ நேர்நேர் நிரைவிழ மீண்டனளே. 199

அவன் மொழிக் கொடுமை சென்று அவட்கு இயம்பல்

குழிந்தாழ்ந்த வாறியங் கிக்குன்ற மேறிக் குறுகிமதுப்
பொழிந்தாரும் சோலைக்குள் வந்தன ராம்நின்று
போயினராம்
மொம்ழிதா ரிதுநம் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
வழிந்தாரும் தேன்தொடை யார்க்கென்சொல் வோமின்சொல்
வாணுதலே. 200

---

198. சூது-சூதாடும்காய். மாது-தலைவி. மாருதி-அநுமன். அநுமனிடம் மோதிரத்தைக் கொடுத்துத் தூது விட்ட இராமனே சங்கரமூர்த்தி என்க. மாது இரங்காதது - தலைவன் வந்ததை அறிந்தும் தலைவி மனமிரங்கி அவனைக் காணாதிருந்தது. ஈது இரங்காதீர் - தலைவன் வந்து வறிதே திரும்பிய இதற்கு மனம் இரங்காதவரானீர்.

199. பொன்னியல்-பொன்னால் செய்த. நேர் நிரையே நிரை - கூவிளங்கனி பொன்னால் செய்த கூவிளங்கனி போன்ற முலை என்க, உன்னியல் வண்டுகள் – தலைவனை ஒத்த வண்டுகள். முன் இயல் நேர்-முன்னே நடத்தலை உடைய, நிரை பின-பசுக்கூட்டத்தின் பின்னே. நேர் நேர் நிரை-தேமாங்கனி. புணர் முலையாள் சுனையில் தேமாங்கனி விழ மீண்டனள் என முடிக்க. இச் செய்யுளில் பொருட் பெயர்களை அசைப் பெயரால் கூறியிருப்பது ஓர் நயம்.

200. ஆறு-வழி. இயங்கி-நடந்து. குறுகி-நெருங்கி வந்து. தேன் தொடை யார்க்கு - தேன் சொட்டும் மாலையணிந்த தலைவர்க்கு. வாள் நுதல் - ஒளி மிக்க நெற்றியை உடைய தலைவி.

என்பிழைப்பு அன்று என்று இறைவி நோதல்

தனிபின்பு முன்னென தாசையு மாய்ச்செலத் தண்சுனைக்கே
கனிபின்பு வீழக் கலங்கிய வாறும் கயல்விழியாய்
முனிபின்பு தம்பி யொடும்போன சங்கர மூர்த்திநல்லூர்ப்
பனிபின் பெனக்குளிர் சோலையும் பார்த்திலர்
பார்த்திபரே. 201

அல்லகுறி முற்றும்.

## வருந்தொழிற்கு அருமை

தாய் துஞ்சாமை

என்னையிங் கேயன்பர் சேர்வதெவ் வாறுமின்
னேந்திழையாய்!
பின்னையிங் கெய்து வதுசுக் கிரீபர் பெரும்சமர்க்குள்
முன்னையிங் கேகொண ரென்றோதும் சங்கர மூர்த்திநல்லூர்
அன்னையிங் கேகண் அடையாள் அடைப்பள்
அருங்கதவே. 202

நாய் துஞ்சாமை

மீக்கூட்ட மிட்ட இமையோர் செவிபொத்த மெல்லி! இவ்வூர்
நாய்க்கூட்ட மிட்ட குரைப்பெழு மேல்நல் நளினத்தன்னம்
மூய்க்கூட்ட மிட்ட குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
ஈக்கூட்ட மிட்ட வரையார் வரும்வழி எவ்வழியே. 203

---

201. தனிமை பின்பு வரவும், எனது ஆசை முன்னே செல்லவும் ஆக நான் செல்ல என்க; முனி பின்பு தம்பி யொடும் போன-விசுவாமித்திர முனிவர்க்குப் பின்னே இலக்குவனோடு சென்ற (இராமன்). பனி பின்பு எனக்குளிர் சோலை - பனியும் தோற்றுப் பின் போம்படியான குளிர்ச்சியுடைய சோலை. பார்த்திபர்- அரசரை ஒத்த தலைவர்.

202. கொணர்-கொண்டு வருக. கண் அடையாள் - தூங்க மாட்டாள். "தாய் கண்மூடி உறங்கவில்லை. கதவையும் அடைத்து விட்டாள். தலைவர் இவ்வூர்க்கு எங்ஙனம் சேர்வார். அதன்பின்பு இக்குறியிடத்துக்கு எவ்வாறு எய்துவார்" என்கிறாள் தலைவி.

203. மீ - மேலே உள்ள தேவலோகம். மெல்லி - மென்மை உடைய தோழியே. நளினம் - தாமரை. மூய் - மொய்த்து. ஈ-தேனீக்கள். வரையார் - மலை நாட்டை உடைய தலைவர்.

ஊர் துஞ்சாமை

வாரென்ப தைத்தேரும் கொங்கை!இவ் வூரில்
வருங்கேள்விசைத்
தேரென்ப தன்பர் திருவுள்ளப் பாலைத் திரிக்குமுறை
மோரென்ப தன்றிக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
ஊரென்ப தெவ்வாறு றுமுறங் காமல் ஒலிக்கின்றதே. 204

காவலர் கடுகுதல்

கொடிசாயத் தேயும் மருங்குல்நல் லாய்நம்
கொழுநர்பொற்றேர்
நொடிசாயும் முன்புநம் மூர்க்கெய்து மேகணை
நூறியொன்னார்
முடிசாய வென்ற குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
துடிசாயக் காவலர் கண்சாயத் தெய்வம் துணைசெயிலே. 205

நிலவு வெளிப்படுதல்

செம்மதி யாய்!நமது ஊர்க்கிருள் வாயன்பர்
சேர்வதெவ்வா
றம்ம திவாகரன் போலெரி யாநின்ற தஞ்சலரூர்
மும்மதில் காய்ந்தவ னைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்
நம்மதி சோருமிந் நாள்மதி யாதால்பா ணாள்மதியே. 206

---

204. வார் என்பதைத் தேரும் கொங்கை–தனது பெருக்கத்தால் தாங்குமோ தாங்காதோ எனக் கச்சின் வலிமையை ஆராயும் நகிலை உடைய தோழியே! தேர் என்பது இவ்வூரில் வரும் அதன் ஓசையைக் கேள் என்க; திரிக்கும் - மோராகத் திரியச் செய்யும்; உறை மோர்-உறை குத்தும் மோர். "ஊர் உறங்காமல் ஒலிக்கிறது; அதனால் இவ்வூரை அன்பரின் மனமாகிய பாலை உறை வைக்கும் உறை மோர் என்று சொல்லலாமே தவிர ஊர் என்று சொல்வது எவ்வாறு பொருந்தும்" என்கிறாள் தலைவி.

205. கொடி சாய - கொடி தோற்கும்படி; தேயும் மருங்குல் – மெலிகின்ற இடுப்பு; நொடி - கையால் நொடியும் ஒரு வினாடி; கணை நூறி - அம்பினால் கொன்று குவித்து; ஒன்னார்-பகைவர். காவலரின் துடி என்னும் பறையின் ஓசை அவியவும் அவரது கண்கள் மூடவும் தெய்வம் துணை செய்தால் தலைவரின் தேர் ஒரு நொடியில் நம் ஊர்க்கு வந்துவிடும்" என்கிறாள் தலைவி.

206. செம்மதி யாய்-செம்மையான அறிவுள்ள தோழியே; இருள்வாய்-இருட்டில்; திவாகரன் - சூரியன்; அஞ்சலர்-பகைவர்; ஊர் மும்மதில் காய்ந்தவனை - வானத்தில் ஊர்ந்து செல்லும் மூன்று புரங்களைச் சுட்டெரித்த சிவனை; நம் மதி–நமது அறிவு; பாணாள் மதி-நடு இரவில் தோன்றிய சந்திரன். "பாணாள் மதி நம்மை இன்று மதியாது; சூரியனைப் போல எரியா நின்றது. நமது அறிவு சோர்கிறது. நமது தலைவன் இருளில் ஊர்க்கு வருவது எவ்வாறு?" என்கிறாள் தலைவி.

கூகை குழறுதல்

வாள்தானை நீத்தெய் திடுமுன் குழறி வழிமறிக்கும்
கோட்டானை வீழ்த்த மருந்தில்லை யோகஞ்சக்
கோன்[முன்]விட்ட
மோட்டானை சாய்த்த திறலாளி சங்கர மூர்த்திநல்லூர்க்
காட்டானை சேர்க்கவும் நாட்டானை யாக்கவும்
கற்றவர்க்கே. 207

கோழி குரல் காட்டுதல்

காண்டலை உன்னியிவ் வூரிருள் வாய்வரும் காவலனே;
வேண்டலை வேண்டலையென்று[முன்] நாள்கடல்மேல்வெகுளி
மூண்டலை மேல்செஞ் சரங்கோலுஞ் சங்கர மூர்த்திநல்லூர்
ஆண்டலை கூவும் பறைபோல் சிறையும்
அறைந்தறைந்தே. 208

வருந் தொழிற்கு அருமை முற்றும்.
இரவுக்குறி இடையீடு முற்றும்

---

207. வாள் தானை நீத்து-வாளேந்திய படையாகிய வெள்ளம்; குழறி-ஒலி எழுப்பி; கோட்டானை-ஆந்தையை; கஞ்சக்கோன்-கம்சனாகிய மன்னன்; மோட்டு ஆனை-பெரிய யானை. ''காட்டிலுள்ள யானைகளைப் பிடிக்கவும் அவற்றை நாட்டில் வாழும் சாதுவான யானையாகப் பழக்கவும் கற்ற தலைவரிடம் கோட்டானைக் கொல்ல மருந்து இல்லையோ'' என்கிறாள் தலைவி.

208. உன்னி-நினைத்து; காவலன்-தலைவன்; வேண்டலை வேண்டலை என்று – இராமனது வேண்டுகோளை விரும்பவில்லை என்று சொல்லி; சரம் கோலும்-அம்பு விடுகின்ற; இராமனது வேண்டுகோளை ஏற்காத கடலரசன் மீது இராமன் அம்பு தொடுத்தான் என்பது வரலாறு. ஆண்டலை – சேவற்கோழி; சிறையும் அறைந்து அறைந்தே-இறக்கைகளைப் பலமுறை அடித்துக் கொண்டு. ''காண்பது கருதிக் காவலன் இருளில் வருகிறான்; ஆனால் கோழி பறைபோல் இறக்கையை அடித்துக்கொண்டு கூவுகிறது'' என்கிறாள் தலைவி.

## வரைதல் வேட்கை

பருவரல் பாங்கி வினாதல்

பொன்னோமின் னோவெனும் நல்லாய்சொல் லாயம்
புலந்ததுண்டோ
உன்னோ டுடன்நின்ற யானறி யாம லுரைதெளிந்த
முன்னோர் புகழும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
என்னோ வருத்தமி யாதோ திருவுள்ளத் தெண்ணியதே. 209

இறைவி அருமறை செவிலிஅறிந்தமை கூறல்

நொந்தோயும் மெய்யுமென் னுள்ளத்து வாட்டமும்
நோக்கிமுத்தம்
சந்தோடு வெம்பு தனங்களும் பார்த்துத் தமிழினுக்கு
முந்தோகை கண்ட குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
அந்தோ செவிலி யறிந்தாள்;மின் னேநம் மருமறையே. 210

தலைமகன் வருந்தொழிற்கு அருமை சாற்றல்

மாதாவும் நாயுமிவ் வூராரும் காவல் மறவரும்கண்
ணேதாழ வில்லை; நிலாபக லான திலக்கணஞ்சேர்
மூதாரின் முத்தமிழ்ப் பாதேரும் சங்கர மூர்த்திநல்லூர்க்
கோதாய்! இரைந்தெழும் கோதாய்க் குடிஞையும்
கோழியுமே. 211

---

209. நல்லாய்-தலைவியே! ஆயம்-தோழியர் கூட்டம்; புலந்தது-வெறுத்தது; உரை தெளிந்த-சொற்களை நன்றாக அறிந்த.

210. ஓயும் மெய்-தளர்ந்த உடம்பு; சந்து-சந்தனம்; அருமறை-அரிய களவொழுக்கம். "ஓயும் மெய்யையும் உள்ளத்து வாட்டத்தையும் நோக்கித் தனங்களையும் பார்த்து அருமறையைச் செவிலி அறிந்தாள்" என்று முடிக்க.

211. கண்ணே தாழவில்லை-தூங்கவில்லை; மூதாரின் முத்தமிழ் – கல்வியறிவில் மூத்த புலவர்களின் முத்தமிழ்; தேரும்–ஆராயும்; கோதாய்! – மாலையணிந்த தோழியே; கோ தாய்-குற்றமுடையதாகி; குடிஞை-ஆந்தை.

### தலைமகன் ஊர்க்குச் செலவு ஒருப்படுதல்

கான்தூர வீசும் மலர்த்தா ரவர்வரக் காண்கிலம்நாம்
தேன்தூரங் கண்டு முடவனண் ணாந்தெனச் சிந்திப்பதென்
மூன்றூர்வென் றோன்பொன் னடிபோற்றும் சங்கர
மூர்த்திநல்லூர்த்
தான்தூர மோவணித் தோசொல்ல வேண்டும் தளிரியலே. 212

### பாங்கி இறைவனைப் பழித்தல்

கைக்குளிக் குந்து கணைமத னேவக்கண் காட்டுமயற்
சிக்குளிக் குங்குமக் கொங்கையைக் காயல் செறிகுரண்டம்
முக்குளிக் குங்குட நாடாளி சங்கர மூர்த்திவெற்பா!
மைக்குளிக் குங்கண்ணின் நீர்சோரத் தான்வைத்த
வாய்மைநன்றே. 213

### பூங்கொடி இறையோன் தன்னை நொந்து இயற்பட மொழிதல்

உற்றொன் றுயிருள மொன்றா யுடலுமொன் றத்தழுவிப்
பற்றொன்று கேண்மைமுன் நாள்மற வார்மலர்ப்
பாவையிந்நாள்
முற்றொன்று கேள்விக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா!
மற்றொன் றுமறந் ததெளி யேன்செய்த வல்வினையே. 214

---

212. கான்–நன்மனம்; மலர்த்தாரவர் - மலர் மாலை அணிந்த தலைவன்; மூன்று ஊர் வென்றோன்-முப்புரங்களை எரித்த சிவன்; தளிர் இயலே-மாந்தளிர் போன்ற இயல்புடைய தோழியே.

213. இக்கு-கரும்பு; கணை - அம்பு; அயற்சி - தளர்ச்சி; கொங்கையை - தலைவியை; குரண்டம்-கொக்கு; முக்குளிக்கும்-மீனைப் பிடிக்க நீருள் மூழ்கி எழும்; மைக்குளிக்கும் கண்-மை பூசிய கண்; நன்றே-நல்லதோ.

214. கேண்மை முன் நாள் மறவார் - முந்திய நாட்களில் நட்பை மறவார் தலைவர்; மலர்ப் பாவை-மலரில் உள்ள திருமகளைப் போன்ற தோழியே! இந் நாள் மற்று ஒன்று மறந்தது - இப்போது, விரைந்து வருவேன் என்று கூறிய ஒன்றை மறந்து விட்டது.

### கனவு நலிபு உரைத்தல்

என்னங்கம் நான்மறந் தேதுயில் யாமத் திமைத்தவுடன்
மன்னங்கம் நான்புல்லல் போக்கும் கனாவையெவ்
வாறுரைப்பேன்
முன்னங்கல் நாரி யுருவாக்கும் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பன்னங் கனாவினு மஞ்சுமென் சிறடிப் பைந்தொடியே. 215

### கவின் அழிபு உரைத்தல்

மின்சிந்தி வென்ற மருங்குல்நல் லாய்வட மேருவில்செம்
பொன்சிந்தி வெண்பொன்பெற் றாற்போல் இராவணன்
பொன்மகுடம்
முன்சிந்தி யேங்கச் சிலைவாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
என்சிந் தனைநையப் பெற்றேன் கவினழிந் திப்பசப்பே. 216

### தன் துயர் தலைவர்க்கு உணர்த்தல் வேண்டல்

வைத்தாரை வேலர்முன் னென் துன்பம் காட்டி வகுந்துரைத்தல்
இத்தா ரணிக்கிளைக் குண்டேலுண் டேகொண்
டினிதுசொல்ல
முத்தார மார்பன் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்க்
கொத்தார் குழலி மனைதொறும் பீரமும் கூரமுமே. 217

---

215. அங்கம் - உடப்பு மன்-மன்னனை ஒத்த தலைவர் புல்லல் - தழுவுதல் கல் நாரி உருவாக்கும் - கல்லை அகலிகை என்னும் பெண் உருவமாக்கும் (இராமன்). பன்னம் - சாதி பத்திரி. இது அடிக்கு உவமை. சாதி பத்திரியை விடச் சிவப்பான அடி என்பதை, சாதிபத்திரி கனாவினும் அஞ்சுகிற சிறடி என்று நயமுறக் குறிக்கிறார் புலவர்.

216. மின் சிந்தி வென்ற மருங்குல் - மின்னலைச் சிதறி ஓடுமாறு வெற்றி கொண்ட இடுப்பு. மேருமலையில் பொன்னைப் போட்டு விட்டு வெள்ளியைப் பெற்றதைப் போல, என் அழகை அழியவிட்டு இப்பசலை நிறத்தைப் பெற்றேன் என்றாள் தலைவி. சிந்தனை நையக் கவின் அழிந்து பசப்புப் பெற்றேன் என முடிக்க. பசப்பு - பசலை நிறம்.

217. வைத் தாரை - மிகக் கூர்மை உடைய. வகுந்துரைத்தல் - விளக்கிச் சொல்லுதல். தரணிக் கிளைக்கு - கழுத்தில் சிவந்த கோடாகிய வளையத்தைப் பெற்ற கிளிக்கு; பீரமும் - பீர்க்கங் கொடியும்; கூரமுமே - பாகலாய்க் கசக்கும்; அதாவது பீர்க்குப் பூத்து மாலை நேரத்தை உணர்த்தி வருத்தம் செய்யும் என்பதாம்; கூரம் - பாகல்.

### துன்புறல் பாங்கி சொல் எனச் செல்லால்

உன்னற் கிசைந்தேனை நீயே யுரையென் றுரைப்பதெண்ணிக்
கன்னற்கு இசைந்த கனிமொழி யேயெனைக் காப்பறிந்து
முன்னற் கிசைந்தும் குடநாடன், சங்கர மூர்த்திவெற்பர்க்
கின்னற் கிசைந்தது நீயே இசையது இசையல்லவே. 218

### அலர்பார்த்து உற்ற அச்சக்கிளவி

பேரல ரென்னில் சிறிதஞ்சு மேயுள் புழுங்கியிந்த
ஊரலர் என்னப் பெரிதஞ்சு மேநெஞ்சம் ஒண்முருந்து
மூரலர் மோகன் குடநாடன் சங்கர மூர்த்திவரைத்
தாரலர் திண்புயத் தார்வருந் தோறும் தளிரியலே. 219

### ஆறு பார்த்து உற்ற அச்சக்கிளவி

அனம்பின் செலச்செல்லு வாயல்லின் வாய்வழி ஆளிகரி
சினம்பின் செலச்செல்லும் என்றஞ்சி யேயொரு
[செந்தமி]ழான்
முனம்பின் செலச்செல்லும் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பென்
மனம்பின் செலச்செல்வ ரேகுட நாட்டுறை வல்லவரே. 220

---

218. கன்னற்கு இசைந்த கனி மொழியே! - கரும்பை ஒத்த கனிவான மொழி பேசும் தோழியே ! முன் நற்கு இசைந்தும்- முன்னை நாட்களில் நலம் செய்வதற்கு மனமொத்தும்; இன்னற்கு இசைந்தது - துன்பம் செய்ய மனமொத்தவாற்றை. நீயே இசை - நீயே எடுத்துச் சொல், அது இசையல்லவே - அங்ஙனம் கூறுதல் புகழ் அல்லவா.

219. பேர் அலர் - பெரு வெள்ளம். ஊர் அலர் ஊரார் பேசும் பழிச் சொல் "பெரு வெள்ளம் வருகிறதென்றால் என் நெஞ்சம் சிறிதளவே அஞ்சும்; ஆனால் மனம் புழுங்கி இந்த ஊரார் பேசும் அலர் எழுந்தது என்றால் என் நெஞ்சம் பெரிதும் அஞ்சும் என்கிறாள் தலைவி. முருந்து-மயிலிறகின் அடிப்பாகம்; மூரலர்- பற்களை உடையவர்.

220. அல்லின் வாய் - இரவில். ஆளி கரி சினம் பின் செலச் செல்லும் - யாளிகளும் யானைகளும் தமது கோபமும் பிற்பட முன்னே செல்லும். செந்தமிழான் முனம் பின் செலச் செல்லும் - கணி கண்ணன் என்ற தமிழ்ப்புலவன் முன் செல்ல அவன் பின் சென்ற (திருமால்).

### காமம் மிக்க கழிபடர் கிளவி

சிகரஞ் செறிவரை யார்வரை யாதுநன் சிந்தைசெய்தென்
நகரம் செறிவதெந் நாளுரை யாயலர் நன்நளின
முகரஞ் சிதமட வார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்
மகரஞ் செறிகட லே!கட லோடு மரக்கலமே! 221

### தன்னுள் கையாறு எய்திடு கிளவி

குழுவாய் அலைபுனல்! யாரேநின் னாருயிர்க்
கொண்கர்தம்மைத்
தழுவாய்ப் பிரிந்தனை யோவுரை யாயரிச் சந்திரனென்னும்
முழுவாய்மைப் பட்ட முடையான்கோன் சங்கர
மூர்த்திநல்லூர்க்
கெழுவாய் பயனிலை யாய்விழு வாய்மறிந் தென்னை
யொத்தே. 222

### நெறி விலக்குவித்தல்

நல்லரைத் தஞ்சன மிட்டதொப் பாங்கங்குல் நண்ணலண்ணல்
கள்ளரைப் போலென் றறிந்துரை யாய்கருங்
கண்ணி! தெண்ணீர்
முள்ளரைப் பங்கய மின்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்
வல்லரைத் தந்த வயற்குட நாடர் வரிலெதிர்ந்தே. 223

---

221 சிகரம் - மலை உச்சி. வரையார் - மலை நாட்டை உடைய தலைவர்; வரையாது - தனது வருகையை நீக்காமல்; நளின முகம்-தாமரை போன்ற முகம்: ரஞ்சிதம் - மனமகிழ்ச்சி; மகரம் - மகர மீன்,

222. குழுவாய் - கூட்டமாக; கொண்கர் - கணவர்; வாய்மைப் பட்டம் - சத்திய சந்தன் என்ற தகுதி. ''அலை மோதுகிற கடல் வெள்ளமே! நின் கணவர் யார்? அவர் தம்மைத் தழுவாதபடி விட்டுப் பிரிந்தாயோ சொல்லாய்! மேலே எழுகிறாய்; பிறகு என்னைப் போலப் பயனற்றுக் கீழே சுருண்டு விழுகிறாய்'' என்று தலைவி தனக்குள்ளே கூறிக் கொள்கிறாள்.

223. அஞ்சனம் – மை; கங்குல் இருட்டு; நண்ணல் - வாராதீர். முள் அரைப் பங்கயம் - முள்ளைத் தண்டிலே உடைய தாமரை. பங்கய மின் - தாமரையில் உள்ள திருமகள். வல்லரைத் தந்த – வல்லாரை என்ற கீரை முளைத்த.

### குறி விலக்குவித்தல்

பதைப்புநம் பாலுண் டிரவூடு நண்ணில் பகல்வருகென்
றதைப்புனல் நாடர்க் குரையாய்மின் னேதினை யன்றறிந்த
முதைப்புனம் பார்த்தனை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
இதைப்புனம் போன்று கதிர்காட்டக் காண்மினென்
றேயினளே. 224

### வெறி விலக்குவித்தல்

காட்டாமை என்னுள்ளத்து உள்ளே கலந்தமை கண்டுணர
மாட்டாமை இன்னுயிர் வாட்டாமை காத்தல்நின் வல்லமைகாண்
மோட்டாமை தாங்கும் புவிகாத்த சங்கர மூர்த்திநல்லூர்த்
தோட்டாமை வேல்விழி யாயறி யாமை
தொடங்குமுன்னே. 225

### பிற விலக்குவித்தல்

அரசங் கறிகுவர் கொல்லோ யுருகியென் னங்கங்குன்றக்
கரசங்கஞ் சோர்ந்திடக் கைமா சுமப்பக் கனகங்கொண்டு
முரசம் முழங்குங் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பிரசங் கழுமலர்க் கொய்தார் வரையப் பிறர்விரைந்தே. 226

---

224. பதைப்பு - மனத்துடிப்பு; மின்னே - தோழியே; முதைப் புனம் - பழைய தினைப்புனம். அனை - தாய். இதைப் புனம் - இதை என்ற ஒருவகைப் பயறு விளையும் கொல்லை.

225. காட்டாமை - வெளிக் காட்ட முடியாத மயக்கம், உணரமாட்டாமை உணரும் அறிவில்லாத ஆடு. வாட்டாமை - வருத்தாதபடி. மோட்டு ஆமை - முதுகு உயர்ந்த ஆமை. ஆமை தாங்கும் புவி என்றது, உலகங்களின் அடுக்கைக் கூர்மம் ஒன்று தாங்குகிறது என்று கூறும் புராண மரபு பற்றிக் கூறியதாகும். தோட்டாமை வேல் விழி - தொகுதியான வேல் போன்ற மை பூசிய கண்ணை உடைய தோழியே. ஆய் அறியாமை தொடங்கு முன்னே - தாய் தனது அறியாமையால் வெறியாடத் தொடங்குதற்கு முன்னதாக.

226. அரசு-அரசனை ஒத்த தலைவன்; அங்கம்-உடம்பு; கர சங்கம்-கையில் அணிந்த சங்க வளையல்; கைமா-யானை; கனகம்-பொன்; பிரசம் கழுமலர்-தேன் மிக்க பூக்களை.

### குரவரை வரைவு எதிர் கொள்ளுதல்

பதியா தெனவிக மூார்புகழ் வார்பசும் பொற்குழைதோய்
நுதியா ரயில்விழி யாய்!முறை பேணி நுவலின்நம்மூர்
முதியா ரெதிர்கொள்வர் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
மதியா திரார்மதிப் பர்மதி தோய்குடை மன்வரிலே. 227

வரைதல் வேட்கை முற்றும்.

## வரைவு கடாதல்

### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்

சிலைவள்ள லு[க்கழு] தாளெங்கள் பேதை செவிலிமின்னே
மலைவெள்ளம் போல்மழைக் கண்களின் நீருக வார்ந்தொழுகு
முலைவெள்ள மேதென்ன நல்லூரன் சங்கர மூர்த்திமுந்நீர்
அலைவெள்ளம் பொங்கியென் வண்டலெல் லாம்வந்
தழித்ததென்றே. 228

### அலர் அறிவுறுத்தல்

மேவலர் வாயலர் கோவலர் வேயலர் மெல்லிசைவேள்
ஏவலர் போல்கொடி தேதமிழ் நாட்டுக் கிறைவர்புனை
மூவல ரும்பணி நல்நீலச் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பூவலர் செங்கைமின் கொங்கைபொன் போர்த்த
புரவலரே. 229

---

227. பதி-ஊர்; குழை-காதணி; நுதியார் அயில் - கூர்மை உடைய வேல்; நுவலின்-சொன்வால்; மதிதோய் குடை - சந்திரனை ஒத்த குடை. மன் வரில் - தலைவன் வந்தால்.

228. சிலை வள்ளலுக்கு - மலை நாட்டில் வாழும் தலைவர்க்காக; பேதை - தலைவி; செவிலி மின்னே-செவிலியானவள் தோழியை நோக்கி மின்னே என்று விளித்து; முந்நீர்-கடல்; வண்டல்-வண்டல் மண்ணால் செய்த பாவை. ''தலைவனுக்காகத் தலைவி அழுதாள். அது கண்ட செவிலி தோழியை நோக்கி வெள்ளம்போல் கண்ணீர் ஒழுக மார்பில் வந்த வெள்ளம் ஏது என்றாள். கடலின் அலை வெள்ளம் வண்டல் பாவை அழித்தது அதற்காக அழுதாள் என்று சொன்னேன்'' என்கிறாள் தோழி.

229. மேவலர்-விரும்பாத பகைவர்; அலர்-பழிமொழி; கோவலர்-இடையர்; வேய் அலர் மெல்லிசை-குழலில் தோன்றும் இசை; மேவலரின் வாய் அலரும் கோவலரின் வேயலரிசையும் மன்மதன் ஏவும்மலர்போல் கொடிதாயின என்க; இறைவர்-அரசர்; புனை மு அலர்-சூடிக்கொள்கிற ஆத்தி வேம்பு பனை என்ற மூன்று பூக்கள்.

### தாய் அறிவுறுத்தல்

நறைகொண்ட கொண்ட லெனும்கொண்டை
கெண்டை நயனங்கொண்டு
நிறைகொண்ட பூங்கொடி யொன்னார் திறைகொண்டு
நீள்நிலத்தை
முறைகொண் டிறைகொண்ட நல்லூரன் சங்கர
மூர்த்திவெற்பா
மறைகொண்ட துமன்னை கண்டாள் முலைகொண்ட
வண்ணங்கொண்டே. 230

### வெறி அச்சுறுத்தல்

சிறியார் உடல்பெரி யார்வெறி யாருன் செயலையெல்லாம்
குறியார் பயம்நெடி யாரன்னை மார்வெறி கொள்வரினி
முறியாருஞ் சோலைக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
மறியா ருயிர்மறி யார்மறி யார்கண் மயில்பொருட்டே. 231

### பிறர் வரைவு உணர்த்தல்

மெய்வரை யாம்நின் வரைவெண்ணிக் கூடல் விரித்திழைத்துக்
கைவரை சேப்ப மணலளை வாளைக் கருதிச்செந்தேன்
மொய்வரை தாங்கி நிரைகாத்த சங்கர மூர்த்திநல்லூர்
மைவரை மேல்பல ரேவரை வான்வந்த மன்னவரே. 232

---

**230.** நறை-நறுமணம்; கொண்டல்-மேகம்; கெண்டை நயனம் - கெண்டை மீன் போன்ற கண்; நிறை-கற்பு; முறை-நீதி; இறை-ஆட்சி; மறை-களவொழுக்கம்.

**231.** வெறியார்-வெறியாட்டு நடத்துவோர்; குறியார்-மனத்தில் எண்ணிப் பாரார்; முறி-தளிர்; மறியார் உயிர் மறியார்-வெறிக்குப் பலியாகும் ஆடு உயிர் திரும்பாது; மறியார் கண்-மான் போன்ற கண்; மயில்-தலைவி.

**232.** மெய் வரை-உண்மையாகிய மலை; கூடல் இழைத்தல் என்பது, மனத்தில் நினைத்து கை கூடுமா கூடாதா என்பதை அறிவதற்காக, மணலைப் பரப்பி கண்ணை மூடிக் கொண்டு கைவிரலால் விரைந்து ஒரு சுழி சுழிக்க, அச்சுழியின் தொடக்கமும் முடிவும் ஒன்று கூடியிருந்தால் கைகூடும் என்றும், இரு முனையும் ஒன்று கூடாமல் இருந்தால் கைகூடாது என்றும் அறிவதாகும். தலைவி அவ்வாறு கூடல் இழைத்து இருமுனையும் ஒன்று கூடாமையால் பலகாலும் கூடல் இழைக்க அதனால் விரல் தேய்ந்து சிவந்தது என்க: அளைவாள்-மணலை விரலால் கீறுகின்ற தலைவி. மொய்-நிறைந்த: வரை தாங்கி நிரை காத்த மலையைத் தாங்கிப் பசுக் கூட்டத்தைக் காத்த (கண்ணன்); மைவரை-கரிய மலை.

### வரைவு எதிர் உணர்த்தல்

கனையார் கருங்கடல் வெண்மதி தோன்றிய காட்சிகண்டால்
அனையார்நம் கேளிரெம் மூர்க்கே வருதி யரம்பொருத
முனையா ரயில் செங்கை நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா
நினையா ரெனநினை யார்நினைப் பார்நன்
நினைவுகொண்டே. 233

### வரையும் நாள் உணர்த்தல்

இன்நாகத் தூர்நின் றலர்ந்தன வேங்கைக ளெண்நீலமேல்
அன்நாகத் தூர்நின் றெதிரே யலர்ந்ததோ ரம்புலிகாண்
முன்நாகத் தாடிய போரேறு சங்கர மூர்த்திநல்லூர்ப்
பன்நாகச் சோலைக் குடநாட் டுறையும் புரவலனே. 234

### அறிவறுத்தல்

பன்னம் மறைக்கும் பதத்தோகை யானும் பழிபகர்வன்
என்ன மறைக்கு மறிவறிந் தாள்புன்னை யெல்லவன்தேர்
முன்னம் மறைக்கும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
உன்னை மறைக்கு ளத்தொடு மென்னிலென் னோதுவதே. 235

---

233. கனை-ஒலிப்பு. கடலானது மதி தோன்றிய காட்சியைக் கண்டு பொங்கி எழுவது போன்றவர் நமது சுற்றத்தார் என்க. வருதி-வருக; அரம் பொருத முனையார் அயில்-அரம் அராவிய கூரிய முனையுடைய வேல்; நினை யார்என நினையார்–நின்னை யாரோ என்று அலட்சியமாக எண்ணமாட்டார்கள்.

234. இன் நாகத்து-இந்த மலையில். இந் எனற்பாலது எதுகை நோக்கி இன் எனத் திரிந்தது; வேங்கை-வேங்கை மரம்: நீல மேல் அன் நாகத்து-நீல நிறமாய் மேலே உள்ள அந்த வானத்தில்; ஊர் நின்று–பரிவட்டம் கட்டி; முன் நாகத்து-முன்னொரு சமயம் பாம்பின்மேல்; நாகச்சோலை–நாகமரச்சோலை; புரவலனே-தலைவனே; வேங்கை பூத்தலும், அம்புலி ஊர்கொள்வதும் மணம் செய்யலாம் என்பதை அறிவிக்கும் அறிகுறிகள்.

235, பன்னம்-சாதிபத்திரி, இது காலுக்கு உவமை; தோகை-மயில் போன்ற தலைவி; புன்னை மரம் மிக உயரமாய் வளர்ந்து சூரியனின் தேரை முன் நின்று வழி மறைக்கும் என்க; யான்கூடப் பழி கூறுவேன் என்று தலைவி என்னிடத்தும் மறைக்கும் அறிவைப் பெற்றுவிட்டாள். உன்னையும் தன் உள்ளொத்தொடும் மறைக்கிறாள் எனின் நான் இனி என்ன சொல்வது' என்கிறாள் தோழி.

### குறி பெயர்த்திடுதல்

செம்முனை வேலெந் [தம]ரோர்ந்து நாடவும் செய்வரினும்
மைமுனை வேல்விழி யும்நீயு மிந்த வனத்தைவிட்டு
மும்முனை வேலண்ண லைப்போற்றும் சங்கர மூர்த்திநல்லூர்
வெம்முனை வேலண்ண லேவிளை யாடுமின் வேறிடத்தே. 236

### பகல் வருவானை இரவு வருக என்றல்

கதிரோனின் கையயில் கண்டுளம் நாணுதல் கண்டுமதி
எதிரோய்தல் காண்பதிங் கென்றுகொல் லோவென்
றெறிதிரைநீர்
முதிரோலங் கொண்ட குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
எதிரோலம் கொண்டமை வெற்பாபொற் பாவை
விளம்பினளே. 237

### இரவு வருவானைப் பகல் வருக என்றல்

அரன்தான்முன் வாங்கிய வெற்பின்நம் வெற்பி
லிவரொளிப்பாற்
கரன்தான் விளங்குமெப் போதுமென் றாள்கயல் காயலளி
முரன்றாடு நெய்தல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பி
உரன்தாழ் விலாயிர வூடெய்து மாலுங் கொழிந்தருளே. 238

---

236. செம்முனைவேல் - குருதியால் சிவந்த முனையை உடைய வேல்; நமர் - சுற்றத்தார்; வேல்விழி - தலைவி; மும்முனை வேல் அண்ணல் - மூன்று முனைகளை உடைய சூலம் ஏந்திய சிவபெருமான்; வெம்முனை - கொடிய போர்க்களம்.

237. கதிரோனின் - சூரியனைப் போன்ற; கை அயில் - கைவேல்; எறி திரை - வீசும் அலைகள்; முதிர் ஓலம் - மிக்க ஆரவாரம். எதிர் ஓலம் கொண்ட மைவெற்பா - எதிரொலி கொண்ட கரிய மலைநாட்டை உடைய தலைவனே.

238. அரன்தான் முன் வாங்கிய வெற்பின் - சிவன் முன்பொரு சமயம் வில்லாக வளைத்த மேருமலையைப் போல; பாற்கரன் - சூரியன்; கயல் காயல் - கயல் மீன் திரியும் குளம்; அளிமுரன்று - வண்டுகள் ஒலித்து; வெற்பி - மலைநாட்டில் வாழும் தலைவி. உரன் தாழ்விலாய் - வலிமை குறையாத தலைவனே. ''மேருமலையைப் போல நம் வெற்பிலும் சூரியன் எப்போதும் விளங்குகிறான் என்றாள் வெற்பி; எனவே தலைவனே இரவில் வருவதைக் கைவிடுக'' என்கிறாள் தோழி.

### பகலினும் இரவினும் பயின்று வருக என்றல்

திக்கோ டிளமதி யோரிரு போதினும் சேர்வதுபோல்
இக்கோ டிகல்மொழி யைச்சேர்க நீயென் றிராவணனார்
முக்கோடி நாட்கட்கோ ரேவேவும் சங்கர மூர்த்திநல்லூர்
கொக்கோடி மீனிரை தேர்குட நாட்டுறை கொற்றவனே. **239**

### பகலினும் இரவினும் அகல் இவண் என்றல்

பகலே யலரியோ டுரல ராமிருள் பாயிரவில்
இகலேய் விலங்கும் விலங்க வொண்ணாதழ கேறுகஞ்ச
முகமேய் பணைமுலை யார்மோகன் சங்கர மூர்த்திநல்லூர்
புகலேயல் லாலினி வாரல்மன் னாயிரு போதினுமே. **340**

### உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையும் கூறல்

பொன்நாடு மூருங் குலனும் மரபும் புகழும்மெய்யும்
எந்நாடு மேத்த முடையா யியல்பன் றிலங்குமுன்றில்
முன்நாடும் மேழிக் கொடியாளி சங்கர மூர்த்திநல்லூர்
மின்நாடும் கங்குலின் மேவாரைப் போல்வந்து மேவுவதே. **241**

### ஆறு பார்த்துற்ற அச்சம் கூறல்

அடிச்சிறு கற்களும் முட்களும் பாயுமென் றால்வழிக்கே
துடிச்சிறு மென்மருங் குல்சோர்ந்துள் ளஞ்சுந்
துணர்பூங்கொன்றை
முடிச்சிவ னைத்தொழு நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா
கொடிச்சினி யார்பொருட் டிங்கே வரேலெம் குறிச்சியிலே. **242**

---

239. திக்கு ஓடு - வானமாகிய திசையில் செல்கிற; இக்கு - கரும்பு. இகல்-மாறுபட்ட; மொழியை - மொழி பேசும் தலைவியை; முக்கோடி நாள் - இராவணன் வரமாகப் பெற்ற மூன்று கோடி வாழ்நாள்; ஏ ஏவும் - அம்பைச் செலுத்தும்.

240. அலரி - சூரியன்; இகல்ஏய் - முரண் கொண்ட; விலங்க ஒண்ணாது-தடுக்க முடியாது; கஞ்சமுகம் ஏய் - தாமரை மொக்கினை ஒத்த.

241. பொன்நாடு - அழகியநாடு; எந்நாடும் - எந்த நாட்டில் உள்ளவர்களாலும்; மேழிக்கொடி-கலப்பையின் வடிவம் எழுதிய கொடி; கங்குல்-இருட்டு; மேவார் - பகைவர்.

242. பாயும் - குத்தும்; துணர் - கொத்து; கொடிச்சினியார் - தலைவி; குறிச்சி - மலைநாட்டு ஊர்.

### ஆற்றாத் தன்மை ஆற்றக் கூறல்

அழுதும் தளர்ந்து மயர்வாள் துயர்விரைந் தாற்றுதிகால்
உழுதும் தடம்புயத் தேந்தியு முண்டு முமிழ்ந்தநிலம்
முழுதும் புரந்தருள் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
கழுதும் பருந்துந் தொடரும்வெள் வேற்செங்கைக் காவலனே.
243

### காவல் மிக உரைத்தல்

இறுக்கவி ழா[க்கச்] சினர்கா வலர்கண் ணிமைக்கிலர்பின்
வெறுக்க விழாவி னிரைக்குமெம் மூர்நெய்தல் வெண்திரைவாய்
முறுக்கவிழ் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
மறுக்கவி ழாமதி யுந்தோன்றுஞ் செய்வதெவ் வாறுரையே.
244

### காமம் மிக உரைத்தல்

உகுத்தகண் ணீர்முத்தும் கைவால் வளையு முயிர்ப்பலையும்
பகுந்தகந் தீவொடு மச்சமுந் தாங்கிப் பனுவல்வல்லார்
முகுந்தவென் றேத்துங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
மிகுந்தவெங் காமக் கடிதிமில் கூடும் மிதக்கின்றதே. 245

---

243. அயர்வாள் – தன்னையே மறந்துவிடும் தலைவி; ஆற்றுதி - தணிப் பாயாக. திருமால் நிலத்தைக் காலால் அளந்தான்; தோளில் தாங்கினான்; உண் டான்: பின் உமிழ்ந்தான். அப்படிப்பட்ட நிலம் முழுவதையும் அதே திருமால் சங்கரமூர்த்தியாகத் தோன்றிக் காத்தருள்கிறான் என்க. கழுது – பேய்; காவலனே – தலைவனே.

244. இறுக்கு அவிழா - இறுகக் கட்டிய கட்டு அவிழாத; கச்சினர்–கச்சம் அணிந்தவர். எம் ஊர் விழாவின் வெறுக்க இரைக்கும் - எமது ஊர் மக்களும் விழா நாட்களைப் போலச் செவி வெறுக்குமாறு கூச்சலிடுகிறார்கள். திரைவாய்- அலைகளில்; மறுக் கவிழா மதியும் தோன்றும் - களங்கத்தை மூடிக்கொள்ளாத முழுமதியும் தோன்றுகிறது.

245. வால்வளை – வெண்மையான வளையல்; சங்கு. உயிர்ப்பு அலை - பெருமூச்சாகிய அலை; அகம் தீவு - உள்ளமாகிய தீவு; மச்சம் – உடம்பில் தெரி யும் கரும்புள்ளி, மீன்; பனுவல் - செய்யுள், முகுந்தன் – திருமால்; திமில்கூடு - படகு; கண்ணீராகிய முத்தும் வளையாகிய சங்கும் உயிர்ப்பாகிய அலையும் அகமாகிய தீவும் மச்சமாகிய மீனும் தாங்கிக் காமமாகிய படகும் மிதக்கின்றது என்கிறாள் தலைவி. இது முற்றுருவகம்.

### கனவு நலிபு உரைத்தல்

வண்தக ராடும் குரல்கூந்த லுன்னை மருவிரக்கம்
கொண்டகம் நாண்மலர்ப் பள்ளியின் மேல்துயில்
கொண்டுவிண்டு
முண்டகம் நாறும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
கண்ட கனாவில் கலந்தாள் கலங்கினள் கண்விழித்தே. 246

### கவின் அழிவு உரைத்தல்

ஐயம் புலவுகை வேள்போர்க் கிடைந்துட லங்கயற்கண்
மையம் புகமெலிந் தால்போல் மெலிந்தது வண்டுகிண்டி
மொய்யம் புயமனை யார்கேள்வன் சங்கர மூர்த்திநல்லூர்ச்
சையம் புயநேய ராய்நினை யாயெங்கள் தையலையே. 247

வரைவு கடாதல் முற்றும்

## ஒருவழித் தணத்தல்

### தன்பதிக்கு அகற்சி தலைவன் சாற்றல்

கொம்பா டியகுருந் தூடரும் பாடிக் கொடிமுல்லைசூழ்
எம்பா டியில்சென்று மீள்வன்மின் னேசென் றிருநிதியம்
மும்பா டியபுல வோர்க்கீந்த சங்கர மூர்த்திநல்லூர்
அம்பா டியவிழி பால்துதி தோற்றுதி ஆற்றுதியே. 248

---

246. வஞ்தகர் - வளவிய மயிர்ச்சாந்து; ஆடும் - பூசிய; குரல் கூந்தல் - தொகுதியான கூந்தல்; மருவு இரக்கம் - சேர வேண்டும் என்ற இரக்கம்; முண்டகம் - தாமரை.

247. வேள் - மன்மதன்; இடைந்து - தோற்று; மையம் புக - ஒளிகுன்றிப் போக; கண் மையம்புக மெலிந்தாற்போல், வேள் போர்க்கு இடைந்து உடல் மெலிந்தது எனக் கூட்டுக. அம்புயம் - தாமரை. சையம்புய - பொதியமலை போன்ற தோளை உடைய தலைவனே.

248. கொம்பு ஆடிய குருந்து - கிளைகள் அசைகின்ற குருந்த மரம்; எம் பாடியில் – எமது ஊரில்; இருநிதியம் - சங்கநிதி, பதுமநிதி; அம்பு ஆடிய விழி - அம்புபோன்ற கண்.

### மென்சொல் பாங்கி விலக்கல்

வரந்தி தந்த வனைப்போலும் நீசெலில் மங்கைவிழிச்
சரநதி யோடத் தடந்தரு மேசரத் தாலுரத்த
முரணதி காரம் தவிர்த்தார்த்த சங்கர மூர்த்திநல்லூர்
உரனதி கம்பெறு மன்னாநின் தேரின் உருள்வழியே, 249

### தலைவன் நீங்க வேண்டல்

மின்வரு வேல்நய னத்தாட்கு நீசொல் விரைந்துநொடி
யின்வரு வேனென்றா ரென்பதைப் போயின ரென்றுரைக்கும்
முன்வரு வேன்நங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
பின்வரு வேனென் றயரேல் பிடிநடைப் பெண்கொடியே. 250

### பாங்கி விடுத்தல்

ஆள்வது வேளெம் மலர்ச்சோலை பாசறை ஆயிழைக்கு
நீள்வது கங்குல் வடவா னலத்தின் நிமிர்ந்துதென்றல்
மூள்வது திண்ணங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
மீள்வது நாளையின் றேல்செய்ய லாவது மீட்டில்லையே. 251

---

249. வரநதி தந்தவனைப் போலும் - மேலான காவிரியாற்றை அளித்த அகத்தியனைப் போன்ற; மங்கை - தலைவி; சரநதி - எப்போதும் ஒடும் நதி; தடம் தரும் - வழியை உண்டாக்கும்; சரத்தா லுரத்த முரண் - அம்பின் நாக்கிலே ரத்தம் தோயும் பகைமையாகிய; அதிகாரம் - மிக்க போர்க்கொடுமையை: உரன் - வலிமை; நின் தேரின் உருள் வழியானது மங்கையின் விழிச் சரநதி ஓடத் தடம் தரும் எனக் கூட்டுக.

250. மின் வருவேல் - ஒளி வீசும் வேல்; நயனத்தாட்கு - கண்ணை உடைய தலைவிக்கு; அயரேல் - மயங்க வேண்டாம்; பிடி. - பெண் யானை.

251. ஆள்வது வேள் - ஆட்சி செய்வதோ மன்மதன்; மலர்ச் சோலை பாசறை - சோலை அவனுக்குப் பாசறையாகும்; ஆயிழைக்கு - தலைவிக்கு; கங்குல் - இராக்காலம்; வட வானலத்தின் - வடவைத் தீயை விட; மூள்வது - மிகுந்து எழுவது; மீட்டில்லை - வேறு எதுவும் இல்லை,

### தலைவிக்கு அவன் செலவு உணர்த்தல்

நின்றார்தண் காலை யினிமாலை நேரும்முன் நேர்வதுண்மை
என்றா ரிதுவிளி வென்றா குலங்கொள்ளல் ஈரடியால்
முன்தா ரணியளக் கும்பூமன் சங்கர மூர்த்திநல்லூர்ச்
சென்றார்செல் வார்க்கே நடையார்சொல் வார்புகழ்ச்
செல்வர்மின்னே. 252

### தலைவி நெஞ்சொடு புலத்தல்

அகடுந்து சங்கக் கடல்முர சான்சம ராடவிருள்
பகடுந்து மென்று பகர்ந்தனை யோவெண் பகடூர்ந்தவான்
முகடுந்து சோலைக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
சகடுந்து தேரின்பின் னேயோடி யோடித் தவித்தநெஞ்சே.
253

### சென்றோன் நீடலில் காமம் மிக்க கழிபடர் கிளவி

சோதிச் சுரிமுக மேகொடி தாய்தென் சுரிமுகமே
போதில் திகழ்புனை வேயன்பர்க் கோதிப் புகழ்புனையே
மோதித் தறிசிந்து மாவேந்தன் சங்கர மூர்த்திநல்லூர்
சாதிக் கரும்பெண்ணை யேமுசம் பார்பெய் தரும்பெண்ணையே.
254

---

252. நேரும் முன் - வருவதற்குள்; நேர்வது உண்மை - வந்து விடுவது மெய்யே; விளிவு - இறந்து பாடு; ஆகுலம் கொள்ளல் - வருத்தம் கொள்ளாதே; தாரணி - உலகம்; பூமன் - பூமிக்கு அரசன்; நடை - ஒழுக்கத்தை; மின்னே - மின்னலை ஒத்த தலைவியே.

253. அகடு உந்து சங்கு - மார்பால் உந்தி நகரும் சங்கு; கடல் முரசான் - கடலை முரசாகக் கொண்ட மன்மதன்; சமர் ஆட - போர் செய்ய. இருள் பகடு உந்தும் - இருட்டாகிய யானையைச் செலுத்துவான்; வெண்பகடு ஊர்ந்த வான் - வெள்ளை யானை நடந்து செல்லும் தேவருலகம்; முகடு-உச்சி; சகடு-சக்கரம்; ''நெஞ்சே ! பகர்ந்தனையோ'' என இயைக்க.

254. சோதிச் சுரிமுகமே - ஒளியுடைய சங்கே; என் சுரிமுகம் கொடிது ஆய்து - எனது வட்டமான முகம் கொடுமைக்கு ஆளாய்விட்டது; போதில் புகழ் புனைவே - பூவில் உள்ள அழகே; புனையே - அணிந்துகொள்; தறி சிந்து மா - கட்டுத் தறியை முறிக்கும் யானை; கரும்பெண்ணையே - கரிய பனைமரமே; பெண்ணை - தலைவியாகிய பெண்ணை; இது மடக்கு அணி,

### இதுவும் அது

காலைக் குருகுதொட் டோடமெய் சோர்குவன் கைமெலிந்து
மாலைக்கு உருகினன் ஆள்வார் குருகை மதில்வடகீழ்
மூலை குருகை மறவாத சங்கர மூர்த்திநல்லூர்
வேலைக் குருகினங் காளன்னங் காளன்பர் மீண்டிலரே. 255

### கோற்றொடிப் பாங்கி ஆற்றுவித்தல்

பூவையொப் பாய்நிறத் துன்கேள்வ ரூர்தண்
பொருநையொப்பாய்;
பாவையொப் பாய்கட் டளையால்; கலித்துறை
பாங்கினில்கொண்
மூவையொப் பாயருள் நல்லூரன் சங்கர மூர்த்திகொண்ட
கோவையொப் பாய்;ஐந் திணைப்பொருள் சேர்ந்துறை
கொண்டுற்றவே. 256

### அவன் வந்தமை உரைத்தல்

சொன்னம் படர்வது நின்முலைக் கேசெமும் சொல்லரதி
மன்னம் படர்வது வாராமல் வந்தனர்; வாருதியோன்
முன்னம் படரும் சிலையாளி சங்கர மூர்த்திநல்லூர்
அன்னம் படரும் துறைக்குட நாட்டன்ப ராரணங்கே. 257

---

255. குருகு காலைத் தொட்டு ஓட மெய் சோர்வன் - வளையல் கழன்று காலில் விழ்ந்து ஓட உடம்பு இளைப்பேன்; கை மெலிந்து - செயலற்று: மாலைக்கு உருகினன் - மாலை நேரம் வரும் என்று நெஞ்சு உருகினேன்: ஆள் வார் குருகை - ஆழ்வார் திருநகரி என்னும் குருகை நகர்; மதில் வடகீழ்மூலைக் குருகை - மதிலின் வடகிழக்கு மூலையில் எழுந்தருளி உள்ள குருவாகிய நம்மாழ் வாரின் கை காட்டும் முத்திரையை; வேலைக்குருகு இனங்காள் - கடலோரத் தில் வாழும் நாரைக் கூட்டங்களே.

256. நிறத்துப் பூவை ஒப்பாய் - பசப்பு ஏறிய நிறத்தால் பீர்க்கம் பூவை ஒப்பாய்; கேள்வர் ஊர் தண் பொருநை ஒப்பாய் - தலைவரது ஊரில் உள்ள பொருநையாற்றை ஒப்பாய்; கட்டு அளையால் பாவை ஒப்பாய் - திரட்டி வைத்த வெண்ணையால் செய்த பாவை போல் உருகுகிறாய்; கலித்து உறை பாங்கினில்-ஒலித்து நீர் சிந்துவதால்; கொண்மூ ஒப்பாய் - மேகத்தை ஒப்பாய்; கோவை ஒப்பாய் - முத்து மாலைபோல் வாய்; ஐந்திணைப் பொருள் சேர்ந்து உறைகொண்டுற்றவே - இங்ஙனம் குறிஞ்சியின் மேகமும் முல்லையின் வெண் ணெயும் மருதத்தின் யாறும் நெய்தலின் முத்தும் பாலையின் நிறத்திரிவும் ஆகிய ஐந்து திணைப் பொருளும் சேர்ந்து தங்கிவிட்டன: (இது தகாது; பொறுத்துக்கொள்.)

257. சொன்னம் - பொன்போன்ற பசலை நிறம்; அதிமன்-மன்மதன்; அடர் வது - வருத்துவதாக; வாருதியோன் - கடலரசன்; அடரும் - வருத்தும்; ஆரணங்கே - தலைவியே.

### வந்தோன் தன்னொடு நொந்து வினாதல்

என்நெஞ்சு வன்நெஞ்ச மாய்த்துயர் பார்த்திங் கிருக்கவுமென்
மின்நெஞ்சம் நன்நெஞ்ச மாயுன்னை நாடவும் வீடணனின்
முன்நெஞ்சு கொன்நெஞ்ச ஏஏவும் சங்கர மூர்த்திநல்லூர்
உன்நெஞ்சு கல்நெஞ்ச மாக முனம்செய்த தூழ்வினையே.258

### வெந்திறல் வேலோன் பாங்கியொடு நொந்து வினாதல்

வசுப்பாய்வ தென்னச் செவிக்கெய்துந் தோறும்
வருந்தினன்மின்
நுசுப்பா யிழையென் பதுநா மறியோமோ
நோக்கிச்சொல்லாய்
முசுப்பாயுஞ் சோலைக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
பசுப்பாய் செருத்தல்மென் பால்நாறும் வாயண்டர்
பாண்குழலே. 259

### பாங்கி இறைவியை ஆற்றுவித்து இருந்த அருமை கூறல்

அசலம் பொருமுலை வாடாம லாற்றின னாற்றின்மும்ம
தசலம் சொரிந்து சலம்செய்யொன் னாரஞ்சச் சஞ்சலஞ்செய்
முசலம் சுழலுங்கை மாவேந்தன் சங்கர மூர்த்திநல்லூர்
நிசலம் பகத்தமிழ்ச் சிந்தா மணியொக்கும்
நின்சொற்கொண்டே. 260

ஒருவழித் தணத்தல் முற்றும்.

---

258. என் மின் - எனது மின்னலை ஒத்த தலைவி. விடணனின் முன் - வ்டணனுக்கு அண்ணனாகிய இராவணன்; கொன் எஞ்ச - அச்சம் தங்குமாறு; ஏ ஏவும் - அம்புவிடுகிற.

259. வசு - நிச்சுவாலை; மின் நுசுப்பு - மின்னல் போன்ற இடுப்பு; முசு - குரங்குகள், செருத்தல் - பசுவின்மடி; அண்டர் - இடையர்; பாண்குழல் - பண் அமைந்த குழலிசை.

260. அசலம்-மலை; ஆற்றின்-ஆற்று வெள்ளம்போல்; மும்மத சலம் - மூன்று வகையான மதநீர்; சலம் செய் ஒன்னார் - வஞ்சம் செய்யும் பகைவர்; சஞ்சலம்-துன்பம்; முசலம் - உலக்கை; கைமா-கையை உடைய யானை; நிசலம்பகத் தமிழ்ச் சிந்தாமணி-மெய்மையாகிய அத்தியாயங்களை உடைய தமிழ்மொழியில் செய்யப் பட்ட சிந்தாமணி என்னும் நூல்.

## வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிதல்

### என் பொருட்பிரிவு உணர்த்து ஏந்திழைக்கு என்றல்

சூதாசை யாம்முலைப் பூமேலென் னாசைச் சுரும்பணிவாட்கு
ஓதாசை நீங்க வொளிராசை கொண்டன் புறவரைவான்
மூதாசை யெட்டும் புகழ்கீர்த்திச் சங்கர மூர்த்திநல்லூர்ப்
போதாசை கொண்டது பொற்பாசை யாமெழில்
பூங்கொடியே. 261

### நின் பொருட்பிரிவு உரை நீ அவட்கு என்றல்

பரிவின் பொருளும் வெறுக்கை;மான் பாலென்
பகர்வன்; நம்மில்
பிரிவில் பொருளும் வெறுக்கையன் றோவொரு
பெண்கொடியாள்
முரிவில் குனித்த செயராமன் சங்கர மூர்த்திநல்லூர்
வரிவிற்கை யாய்! துணை யன்றியார் ஆர்சொல வல்லவரே. 262

### நீடேன் என்று அவன் நீங்கல்

பச்சிம திக்குறும் மட்டும்நில் லேனினிப் பதங்கனுதித்து
உச்சி மதிக்கும்முன் னேவரு வன்;மதி யூர்பொதும்பர்
முச்சி மதிக்கும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
நொச்சி மதில்புறத் தும்மூ ரெதிர்கொள்ள நுண்ணிடையே. 263

---

261. சூது ஆசையாம் முலை - சூதாடு கருவி போன்ற நகில்; முலையாகிய பூவின் மேல் ஆசையாகிய வண்டை அணிவாள் என்றது தலைவியை; ஆசை நீங்க-ஆவல் ஒழிய. ஆசை கொண்டு - பொன்னைத் திரட்டிக் கொண்டு; அன்பு உற - அன்பு பொருந்த; வரைவான் மணம் செய்வதற்காக; மூது ஆசை - பழைய ஆசைகள். போத ஆசை கொண்டது ஓது என முடிக்க. போத - திரும்பி வர; பூங்கொடியே-தோழியே.

262. பரிவின் பொருளும் வெறுக்கை - ஆசை கொண்டு தேடும் பொருளும் வெறுக்கை (செல்வம்) என்ற சொல்லால் கூறப்படும்; நம்மில் பிரிவும் வெறுக்கை நமக்குள் பிரிவதும் வெறுக்கத் தக்கதேயாம்; (எனவே) மான்பால் என்பகர்வன் - தலைவியிடம் என்ன கூறுவேன்; பெண்கொடியாள் - சீதை, முரிவில் குனித்த - முரியும்படி வில்லை வளைத்த; வரிவில் - வரிந்து கட்டிய வில்; துணை அன்றி - நான் தலைவிக்குத் துணையாக இருப்பேனே அன்றி; துணை அன்றி என் பகர்வன் என இயைக்க.

263. பச்சிம திக்கு - மேற்குத்திசை; பதங்கன் - சூரியன்; உச்சி மதிக்கும் முன்னே-உச்சிக்கு வருவதற்கு முன்னே முச்சி; மதிக்கும் - உயரத்தை அளவிட்டுப் பார்க்கும்; நொச்சி மதில் - பாதுகாப்பினைஉடைய மதில்.

### பாங்கி ஓடரிக்கண்ணிக்கு அவன் செலவு உணர்த்தல்

பணிமைக்கண் சோர்ந்தய லாரவர் நோக்கிப் படருழக்கும்
தனிமைக் கிரங்கி வரைவான்சென் றாரண்ணல் தம்பியோடு
முனிமைப் பொதும்பர் மகங்காத்த சங்கர மூர்த்திநல்லூர்
இனிமைக் கிசைந்தசொல் யாழ்ப்பாணம் போலழி
ஈழத்துக்கே. 264

### பூங்குழை இரங்கல்

பிரியாத் திறம்பல சொன்னாரொன் னார்தம் பெருஞ்சமருக்
கிரியாப் படைமன்னர் ஈர்மழு வேந்து மிராமன்செங்கை
முரியாச் சிலைகொள் செயராமன் சங்கர மூர்த்திநல்லூர்
வரியால் சிறந்தகொங் கையவர் போலில்லை
வன்கண்ணரே. 265

### பாங்கி கடுஞ்சொல் சொல்லல்

நகாரியை யொத்தவர் நின்பிரிந் தேகுதல் நங்கைசிறி
தகாரிய முற்றென் றிரங்குவ தோவண்டு தான்நெய்தல்மேல்
முகாரி யிசைக்குங் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
விகாரி யெனச்சொல் வதுதீர் வரைவை விரைவில்வைத்தே. 266

---

264. பனி மைக்கண்-குளிர்ச்சியுடையதும் மைபூசியதுமான கன்; சோர்ந்து-நீர் துளித்து; படர்-துன்பம்; தம்பியோடு - இலக்குவனோடு; முனிமைப் பொதும்பர் மகம்-விசவாமித்திர முனிவர் கரிய காட்டில் செய்த யாகத்தை; இனிமைக்கு இசைந்த சொல் - இனிமை பொருந்திய-சொற்பேசும் தலைவியே; யாழ்ப்பாணம் போல்-யாழிசையாகிய அம்பு போல்; (பிரிந்நவர்க்கு யாழிசை குழலிசை குயிலிசை முதலிய துன்பம் செய்யும் என்பது கருத்து.) அழி ஈழத்துக்கு அழியத்தக்கதான பொன்னுக்காக. ஈழத்துக்கு ஆகச் சென்றார் என்று இயைக்க. யாழ்ப்பாணம், ஈழம் என்பன தொனியலங்காரமாக நின்றன.

265. பிரியாத்திறம்-பிரியாத தன்மை; ஒன்னார்-பகைவர்; சமருக்கு இரியா-போர்க்குத் தோற்று ஓடாதே; படை மன்னர் ஈர்மழு - படைகளை உடைய மன்னர்களை வெட்டுகிற பரசு என்ற ஆயுதம்; மழு ஏந்தும் ராமன்-பரசுராமன்; முரியாச்சிலை முரியாத வில்லை. வரியாற் சிறந்த கொங்கை-கச்சு வரிந்து கட்டிய கட்டால் சிறந்த முலையுடைய தோழியே. வன்கண்ணர் அவர் போலில்லை-கொடியார் அந்தலைவர் போல இல்லை.

266. நகாரி - இந்திரன்; ஒத்தவர் - தலைவர்; அகாரியம் - வீண்செயல்: இரங்குவதோ-வருந்தலாமோ; முகாரி - ஒரு இராகம்; விகாரி - மாறுபட்டவர்; வரைவை விரைவில் வைத்துத் தலைவர் ஏகுதலை அகாரியம் என்று இரங்குவதோ என முடிக்க.

### தலைவி கடுஞ்சொல் சொல்லல்

பொன்மே லுறக்கண்டும் பொன்மேலன் பாயினர் போயினரே
வின்மே லிடும்முகி லன்னாரெண் ணாதம்பு வீடணனார்
முன்மே லடரச் சிலைவாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
என்மே லவர்பொய்யு மேலினி மேலென் னியம்புவதே. 267

### வருகுவர் மீண்டு எனப் பாங்கி வலித்தல்

தினைத்தோரை வெற்பினர் புள்புதல் பெட்டைச் சிறையிலணைத்து
இணைத்தோடும் பான்மைவெம் பாலையில் காண்ப ரிகலெதிர்ந்து
முனைத்தோர்பின் வாங்கச் சிலைவாங்குஞ் சங்கர மூர்த்திநல்லூர்
நினைத்தோர் கணமும் தரியார் தரியினி நெஞ்சனமே. 268

### பருவம் கண்டு பெருமகள் புலம்பல்

ஆலியும் சீகர முஞ்சொரி வேனென் றலரிமழைச்
சூலியும் தோன்றின; தோன்றலுந் தோன்றத்துன் னார்துடிக்க
மோலியுந் தூள்பட வில்வாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
கோலியுந் தும்கொடித் தேர்வர மீளக் குறித்திலரே. 269

---

267. பொன் மேல் உற-பொன் போன்ற பசலை நிறம் முலைமேல் படர: பொன் மேல் அன்பாயினர் - தேடும் பொன்னிடத்தில் அன்பு வைத்தார். வில் மேல் இடும் முகில் அன்னார் – வானவில்லை மேலே தோற்றுவிக்கும் மேகம் போன்ற இந்திர ஜாலம் வல்ல அரக்கர்: எண்ணாது-கொடிய அரக்கர் என்றும் கருதாமல்; வீடணனார் முன் மேல் – விபீடணனின் அண்ணனின் மேலே: அம்பு அடர் அம்பு பாய்ந்து வருத்த; என் மேல் அவர் பொய்யுமேல் - என்னிடம் அவர் பொய்ப்படுவாரானால்,

268. தினைத்தோரை வெற்பினர் - தினையும் மலைநெல்லும் விளையும் மலையுடைய தலைவர்; புள் புதல் பெட்டைச் சிறையில் அணைத்து - புதரில் வாழும் தாய்ப்பறவை தன் குஞ்சுகளை இறக்கையுள் அணைத்து. வெம்பாலை-வெப்பமான பாலை நிலத்தில்; இகல் - பகை; முனைத்தோர் - போரிட்டவர்; தரியார் - தங்கி இரார். தரி - பொறுத்திரு; நெஞ்சுஅனமே – உள்ளத்தாமரையில் இருக்கும் அன்னம் போன்ற தலைவியே.

269. ஆலியும் சீகரமும் - பனிக்கட்டியும் மழைத்துளியும்; அலரி - இடித்து ஒலித்து; மழைச்சூலி - கருவுற்றமேகம்; தோன்றலும் தோன்ற - காந்தட் பூவும் பூக்க; துன்னார் – பகைவர்; மோலி - முடி; கோலி உந்தும் கொடித்தேர்-குதிரை களை அணைத்து விரைவு படுத்தும் தேர்; வர மீளக் குறித்திலர் - மீண்டு வர எண்ணவில்லை,

### இகுளை வம்பு என்றல்

புகிலோம் நிலத்தில் எதிரோடென் றெண்ணிவிண்
போம்மயில்நின்
அகிலோதி கண்டத் தருமையெல் லாம்பய மானதல்லால்
முகிலோ வதுவன்று குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
துகிலோ டிகலி வெளிறும்பின் பார்த்தியென்
சொற்குறியே. 270

### இறைமகள் மறுத்தல்

கோதாய்! கரேலென் றெழுந்தது மேகங்கள்;
கொல்லைமுல்லை
மீதாய் வெளேரென் றதுபூச் சிவேலென்று மேவியது
மூதாய்; தமிழ்த்தென் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
ஓதாய் பசேலென் றதுசோலை யெவ்வண்ண
முய்வண்ணமே. 271

### அவர் தூதாகி வந்து அடைந்தது இப்போது எனத் துணைவி சாற்றல்

நன்தூ துவர்கை யுறுதிச் சொல்தூதிடம் நாடவெதிர்
மின்தூது காட்டிய மேகம்;மின் னேஐந்து வேந்தருக்கு
முன்தூது சென்ற திறலாளி சங்கர மூர்த்திநல்லூர்
இன்தூதின் றோதிய வெங்கோன் வரவுசென் றேவியதே. 272

---

270. ''நிலத்தில் இனிப்புக மாட்டோம். எதிர்க்கவும் மாட்டோம் என்று நினைந்து மயில்கள் விஞ்ஞில் பறந்து போகின்றன. தலைவியே, அகிற்புகை ஊட்டிய நினது கூந்தலைக் கண்டு அதன் அருமை எல்லாம் தமக்கில்லையே என்று அச்சம் கொண்டலே அல்லாமல் அவை மேகமல்ல. அவை தம் அச்சத்தால் வெண்மையான ஆடையைப் போல் இனி வெளிறிவிடும் பார்; எனது சொற்களை நன்கு எண்ணிப்பார்'' என்கிறாள் தோழி.

271. கோதாய்-மாலையணிந்த தோழியே; கரேல் என்று-கருத்து; வெளேர் என்றது-வெண்மையாயிற்று; சிவேல் என்று - சிவந்து; மூதாய் - தம்பலப் பூச்சி. பசேல் என்றது-பச்சை நிறமாயிற்று.

272. நன் தூதுவர்-நல்ல தூதுவரானாலும்; கை உறுதிச் சொல் தூதிடம் நாட-அவரிடம் உறுதியான சொல் எது என்பதை அத்தூதுவராலேயே ஆராயும் பொருட்டு; மின் தூது காட்டிய மேகம்-மின்னல்போல் விரைந்து வந்து தூது உரைத்த மேகம்; ஐந்து வேந்தருக்கு-பஞ்ச பாண்டவருக்காக: வரவு சென்று இன்று ஓதிய எங்கோன் ஏவியதே மேகம் என இயைக்க; ஓதிய - ஓதும் பொருட்டு.

### பிணைவிழி ஆற்றல்

திண்தேர் திருப்பித் திரும்பினர் காதலர் திண்ணம்முல்லை
வண்தேறல் வாடை நிலந்தூற்றும் முன்சிந்த வாரிநன்னீர்
மொண்டேறு கொண்டல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
எண்தேறு நெஞ்சசக மே!யிடி மாமுர செற்றியதே. 273

### அவன் அவண் புலம்பல்

பாதிக்கு மேல்மதன் பூமாரி பெய்யக்காண் பாய்புணர்ப்பின்
வாதிக்கு மேமுலை மாமலை மேலென் வரவையெண்ணி
மோதிக்கு மேதென் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சோதிக்கு மேயென் குயில்,குயில் மீதெழத் துக்கிக்குமே. 274

### அவன் வரும்காலைப் பாகன் தன்னொடும் சொல்லல்

விடுக்ககண் மூடி விழிக்கும்முன் னேக; விசைவலவா!
தொடுக்ககை மேல்குசை ; யென்மனம் போல்வரத்
தூங்கித்திண்டேர்
முடுக்க;மஞ் சார்த்தது; நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
கடுக்குமுன் பார்த்தென் படாள்மென் படாள்நலக்
காரிகையே. 275

---

273. திண்ணம்-உறுதி; தேறல்-தேன்; வாடை-நறுமணம்-வாரி நன்னீர்; கடல்நீரை; கொண்டல்-மேகம்; என் தேறு-எண்ணம் தெளிக; இடிமாமுரசு-இடியாகிய முரசத்தை; எற்றியது-அடித்து: முல்லையானது தனது தேன்மணத்தை வீசுவதற்கு முன்னால், கடல் நீரை மொண்டு எழும் மேகமானது இடி முரசத்தை எற்றியது என்க.

274. மதன் பூமாரி பெய்ய-மனமதனின் பூவும் மழையும் உடன் பெய்ய; காண்பாய்-நெஞ்சே காண்பாய்; புணர்ப்பின் மதன்பூ, மழை என்னும் இரண்டின் சேர்க்கையால் ; வாதிக்கும்-வருந்துவாள்: முலை மா மலைமேல் மோதிக்கும்-முலையாகிய மலைமேல் அடித்துக் கொள்வாள். சோதிக்கும்-ஆராய்ந்து பார்ப்பாள்; என் குயில்-எனது குயிலை ஒத்த தலைவி: குயில் மீதெழத் துக்கிக்கும் குயிலோசை கேட்க வருந்துவாள்.

275. விடுக்க கொண்டு போய் விடுப்பாயாக; விசைவலவா-விரையச் செல்லும் பாகனே; குசை தொடுக்க-சவுக்கை எந்துக; தேர்முடுக்க தேரை விரைவு படுத்துக. மஞ்சு-மேகம்; கடுக்கும் முன்-ஐயப்படுவதற்கு முன்; என்படாள் என்ன துன்பம் படுவாள். மென்படாள்-மெல்லிய ஆடை அணிந்தவள்.

**மேகம் தன்னொடும் சோகம்கொண்டு அவன் சொல்லல்**

பின்னெழி லிக்குறை வேண்டேனென் றோமுன்
பிறங்குமொழி
மின்னெழி லிக்குலங் காள்!விரைந் தீர்சொல்ல
வேண்டும்;மின்னார்
முன்னெழி லிக்கு வளைத்தார்க்கும் சங்கர மூர்த்திநல்லூர்
பொன்னெழி லிக்கு விரையவந் தாரென்று போயுரையே. 276

**பாங்கி வலம்புரி கேட்டு அவன் வரவு அறிவுறுத்தல்**

அம்பான கண்மயில்! கேளாய்தம் பாலென்று மம்பொன்நிறை
சம்பா னெனவும்சம் பாநெல்லெனவும் தழைத்தநல
மும்பா நலமும் புனைகீர்த்திச் சங்கர மூர்த்திநல்லூர்
நம்பால் நலந்தரு வார்தேர் வலம்புரி நல்லொலியே. 277

**வலம்புரி கிழத்தி வாழ்த்தல்**

கைச்சங்க மேபெறத் தந்தாய்செந் தாமரைக்
கண்ணன்கையேந்து
அச்சங்க மேயென நீடுழி வாழி; யருமைபெற்ற
முச்சங்க மேறும் தமிழாளி சங்கர மூர்த்திநல்லூர்ச்
செய்ச்சங்க மூரும் குடநாடர் செங்கைச் செழுஞ்சங்கமே. 278

---

276. பின் எழில்-பின்னே எழுந்து வந்தால்; பிறங்கு மொழி - மாறுபட்ட இடியான மொழியை உடைய; மின் எழிலிக் குளங்கால் - மின்னலை உடைய மேகக் கூட்டங்களே; விரைந்திர்-வேகமாகச் செல்கிறீர். மின்னார் முன்-பெண்களின் முன்னே: இக்கு வளைத்து-கரும்பு வில்லை வளைத்து; பொன் எழிலிக்கு-பொன்போன்ற அழகுடைய தலைவிக்கு; வந்தார் என்று போய் - வந்துவிட்டார் என்று சொல்லிக் கொண்டே சென்று; உரையே சொல்ல வேண்டும் தூது-சொல்ல வேண்டும்.

277. அம்பு ஆன கன்-அம்பு போன்ற கன். வலம்புரி நல் ஒலியே கேளாய் என இயைக்க; தம்பால்-தம்மிடம்; சம்பான்-தோணி; நலம் தருவார்-நலம் தரும் தலைவர். தேர் வலம்புரி-தேரில் நின்று ஊதும் வலம்புரிச் சங்கு.

278. கைச்சங்கம்-கைவளையல்: கை ஏந்து சங்கம்-பாஞ்ச சன்னியம் என்ற சங்கு; முச்சங்கம்-தமிழ் ஆய்ந்த தலை இடை கடை என்ற மூன்று சங்கம். மெய்ச் சங்கம்-வயலில் உள்ள சங்குகள்; செழுங் சங்கம்-(தலைவனது) செழுமையான சங்கம். செழுஞ்சங்கமே கைச்சங்கம் தந்தாய் எனவே நீ கண்ணன் கைஏந்து சங்கம் போல நீடுழி வாழி என முடிக்க.

**நினைந்தமை வினாதல்**

இந்நாட்டின் நீங்கிப் பிறர்புலம் போய்ப்பொருள்
ஈட்டச்சென்ற
நன்னாட்டி லெம்மை நினைந்ததுண் டோ;மயில் நண்ணுதற்கு
முன்னாட்டி லேறிபொற் றாள்போற்றும் சங்கர
மூர்த்திநல்லூர்த்
தென்னாட் டினிய குடநாட் டுறைதடம் தேரன்பரே. 279

**நினைந்தமை செப்பல்**

புனைவன் கொடிஞ்சியம் தேரிவண் போதப்பின்
போம்திரும்பும்,
துனைவன் செலவுக்கு முந்தும்மின் னே!யுன்
துணைப்பொருட்டால்
முனைவன் பகைஞர்க் கிடியேறு சங்கர மூர்த்திநல்லூர்
நினைவன்றி வேறுமுண் டோவொரு நாளுமெம்
நெஞ்சினுக்கே. 280

**அனைத் தகையவளை ஆற்றுவித்து இருந்தமை பாங்கி கூறல்**

வார்ச்சித் திரக்கொங்கை வாடாம லண்ணல்
வரைவிடைவைத்து
ஆர்ச்சிக் கிருநிதிக் கேகுமென் றே;சங்க மன்றமரார்
மூர்ச்சிக்க வூதித் திருவாங்குஞ் சங்கர மூர்த்திநல்லூர்
தேர்ச்சிக்கும் நாள்வரை யுன்வாய்மை யாற்றிடத்
தேற்றினனே. 281

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு முற்றும்.

---

279. பிறர் புலம்-வேற்றவர் நாடு; மயில் நண்ணுதற்கு முன் ஆட்டில் ஏறி என்றது முருகனை; போருக்குப் போகும் போது இந்திரன் மயிலாகி முருகனைத் தாங்கினான் என்றும் அதற்கு முன் முருகன் ஆட்டுக்கிடாயை வாகனமாகக் கொண்டான் என்றும் புராணம் கூறும். ஆட்டிலேறி பொற்றாள் போற்றும்-முருகன் திருவடிகளை வணங்கும். தடம்தேர்-பெரியதேர்.

280. புனை-அழகு செய்த, வன்கொடிஞ்சி அம்தேர்-வன்மையான கொடிஞ்சி என்னும் உறுப்பையுடைய தேர்; கொடிஞ்சி என்பது தேரில் நிற்போர் பிடித்துக்கொள்வதற்காகத் தாமரைமொக்கு வடிவாகச் செய்யப்பட்ட உறுப்பு; போத - வர ; துனை - விரைவு; உன் துணை - தோழியே உனது துணைவியான தலைவி. முனை-முந்துகிற.

281. வார்ச் சித்திரக் கொங்கை-கச்சணிந்த அழகான நகிலை உடைய தலைவி : ஆர்ச்சிக்கு - நுகர்தற்கு ; ஏகும் என்றே தேற்றினன் என முடிக்க

## வரைவியல்

### வரைவு மலிவு

**காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்கு உரைத்தல்**

மின்னே! விடுத்தருள் காதலர் ஈழமும் வேழமும்நம்
பொன்னேயும் ஊரில் புகுந்தது காண்;மனம் புந்திகற்கும்
முன்னே கொடைகற்ற நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பர்
இன்னே புணர்முலை பொன்னேகொன் னேசுமந்
தெய்ப்பதென்னே. 282

**காதலி நற்றாய் உள்ளம் மகிழ்ச்சி உள்ளல்**

ஆவலங் கார இதம்பெறு மேநம தன்னையெழு
நாவலம் காரப்பு நாணுக்கென் கேள்வர் நறும்பொரிதூய்
மூவலங் காரத் தமிழ்தேரும் சங்கர மூர்த்திநல்லூர்ப்
பூவலங் காரப் பந்தர்க்கென் கைப்பற்றப் போந்திடிலே. 283

---

அமரார்-பகைவர். திருவாங்கும்-செல்வத்தைக் கவரும்; தேர்ச்சிக்கும் நாள்வரை-தேர் இவ்வூரில் வந்து சிக்கும் நாள் வரை: உன் வாய்மை-உனது உண்மையான சொற்களால்.

282. காதலர் விடுத்தருள்-தலைவர் அனுப்பி வைத்த; ஈழமும் வேழமும் பொன்னும் அதைச் சுமந்து வரும் யானையும்; பொன் ஏயும் ஊர்-அழகு வாய்ந்த ஊர். புந்தி கற்கும் முன்னே-கல்வி கற்கும் முன்பே; பொன்னே கொன்னே சுமந்து-பசலை நிறத்தை வீணாகச் சுமந்து. எய்ப்பது என்னே-இளைப்பது ஏன்.

283. ஆவல் அங்கு ஆர - ஆசை நிறைவுபெற; இதம்-சுகம். எழுநா வலம்-ஏழு நாக்குகளை உடைய தீயில்; கார் அப்பு-மேகம். நாணுக்கு - வெட்கப்படு மாறு. மு அலங்காரத் தமிழ்-பழைமையானதும் அணிகளை உடையதும் ஆகிய தமிழ். பூ அலங்காரப் பந்தர்-பூவால் அலங்கரிக்கப்பட்ட திருமணப் பந்தல். தலைவர், மேகமும் வெட்கப்படுமாறு தீயில் நறும் பொரிதூவி மணப்பந்தலில் என் கைப்பற்ற வருவாராயின் நமது அன்னை ஆசை நிறைவுற்றுச் சுகம் பெறு வாள் என்க.

### பாங்கி தமர்வரைவு எதிர்ந்தமை காதலிக்கு உரைத்தல்

அதிர்ந்தார் முருடே யறைந்தார் முரசம்பொன் னானகச்சிற்
பிதிர்ந்தாரம் பூண்ட தடமுலை யாயுள் பெருகுமன்பில்
முதிர்ந்தார்நம் கேளிர் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
எதிர்ந்தார் வரையவந் தார்நறுந் தாரன்ப
ரென்றிசைத்தே. 284

### அவள் உவகை ஆற்றாது உளத்தொடு கிளத்தல்

வல்லையுந் தஞ்சலை நெஞ்சே தினம்நம்மை வாட்டவரும்
மல்லையுந் தும்களி யான்நிற்பன் காணுதி வஞ்சிக்கொல்லை
முல்லையும் விள்ளும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
கல்லையுந் தும்புயத் தார்வேந்தர் முன்வைத்துக்
கைகுவித்தே. 285

### தலைவனைப் பாங்கி வாழ்த்தல்

தென்மாலை யேறி வருமாலை வில்லி செருவும்முல்லைப்
பொன்மாலை யும்கண் பொழிமுத்து மாலையும் போக்கியதால்
முன்மாலைக் காட்டும் சுடர்நேமிச் சங்கர மூர்த்திநல்லூர்
நின்மாலை வாழி இறைவா! நிறைவளை நேரிழைக்கே, 286

---

284. அதிர்ந்தார் - ஒலித்தனர்: முருடு, முரசம் என்பன தோற் கருவிகள். அறைந்தார் - அடித்தார்கள்: கச்சிற் பிதிர்ந்து - கச்சுக்கு வெளிப்பட்டு: ஆரம் - முத்துமாலை: எதிர்ந்தார் - எதிர் சென்று வரவேற்றார்கள். ''அன்பர் வரைய வந்தார் என்று சொல்லி நம் கேளிர் முருடு அதிர்ந்தார் முரசம் அறைந்தார் அன்பில் முதிர்ந்தார் வெற்பில் எதிர்ந்தார் என முடிக்க.

285. வல்லை உந்து - விரைந்து செல்; அஞ்சலை – அஞ்சாதே; வாட்ட வரும் மல்லை-வருந்தச் செய்யும் காமனது போராட்டத்தை; உந்தும்-விரட்டுகிற; களியான் - மகிழ்ச்சியால்; கல்லை உந்தும் புயம்-மலையை ஒத்த தோள்.

286. தென் மாலை – தென்றல் காற்றை; ஆலை வில்லி – ஆலைக் கரும்பை வில்லாக உடைய மன்மதன்: செரு–போர்; முத்து மாலை–முத்து முத்தாக விழும் கண்ணீர்த் துளிகளின் தொடர்ச்சி; முன் மாலை காட்டும் - முற்பட்ட திருமாலே என்பதை அறிவிக்கும்.

### தலைவி மணப்பொருட்டாக அணங்கைப் பராநிலை காட்டல்

வார்திகழ் கொங்கை நறும்புகை காட்டி மருமலர்தூய்க்
கார்த்திகழ் காந்தள் அனையகை கூப்பிக், [கருத்துள்]நெல்லை
மூர்த்தியைப் போற்றும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா!
பார்திகழ் மன்றல் பொருட்டா யணங்கைப் பராநிலையே. 287

### தலைமகன் மகிழ்தல்

பாகன சொல்லி யணங்கைப் பராநிலை பார்க்கமுகில்
வாகன வேந்தனொத் தோமில்லை யேவின்சொல் வஞ்சிநல்லார்
மோகன லீலன் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
ஆகன மானொன்று நெஞ்சே மணப்பொருட் டாகநின்றே. 288

வரைவு மலிவு முற்றும்.

## தலைவி அறத்தொடு நிற்றல்

### கையறுதோழி கண்ணீர் துடைத்தல்

தொழுகின்ற சேடியர் மேற்குறை யோவுள்ளம் துண்ணெனவிங்கு
எழுகின்ற தெண்டிரை மோதிய தோசங் கெழக்குரண்டம்
முழுகின்ற காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
எழுகின்ற தேதுகண் ணீருரை யாயென் னுயிர்க்குயிரே. 289

---

287. வார்-கச்சு; கொங்கை-நகிலை உடையளாகிய தலைவி; மருமலர்-மண மலர்; கார் திகழ்-கார்காலத்தில் பூக்கின்ற: நெல்லைமூர்த்தியை-நெல்லையப்பரை; மன்றல் - திருமணம்; அணங்கைப் பரா நிலை - தெய்வத்தை வழிபடும் நிலை. வெற்பா! கொங்கை புகைகாட்டி மலர்தூய்க் கைகூப்பி அணங்கைப் பராநிலை பார் என இயைத்து முடிக்க.

288. பாகு அன-வெல்லப்பாகு போன்ற; முகில் வான வேந்தன்-மேகத்தை வாகனமாக உடைய இந்திரன்; ஒத்தோம் இலை-இந்திரனைப் போல ஆயிரம் கண் பொறாமையால் இந்திரனை ஒக்கவில்லை; மோகன லீலன்-இன்ப விளை யாட்டை உடையவன்; ஆ-வியப்புக் குறிப்பு; கன மான்-மேகம் போன்ற கூந்தலை உடைய மானாகிய தலைவி; பொன் மானாகிய தலைவி என்றலும் ஆம்; கனம்-மேகம், பொன்.

289. சேடியர்-தோழிமார்; துண் என-திடுக்கென; தெண்டிரை - தெளிந்த அலை; குரண்டம்-கொக்கு.

### தலைவி கலுழ்தல் காரணம் கூறல்

மறைசிந் திடாது நறைசிந்து காவில் மணந்தவர்நம்
நிறைசிந் தினாரென் றுரைசிந்து மால்;நெய்தல் நேருந்தும்பி
முறைசிந்து பாடும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
கறைசிந்து [திங்கள்] நுதலாய்!இந் நாளென்
கருங்கண்களே. 290

### தெளிந்தமை எய்தக் கூறல்

தெள்ளின தோர்மன் னவர்தெய்வம் காட்டித் தெளித்தவுரை
உள்ளிநம் போல்விண் டுரையாக் கரியுமுண்
டொண்தொடியாய்!
முள்ளினம் போருக மின்கேள்வன் சங்கர மூர்த்திநல்லூர்ப்
புள்ளின மும்கம் புளினமும் காயல் புளினமுமே. 291

### இகந்தமை இயம்பல்

சுகந்தமைக் கூந்தல்நல் லாய்!தெய்வம் காட்டித்
துணிந்துதெளித்து
உகந்தமைக் கேவென் னுளம்தெளிந் தேன்நெய்த லூதிவண்டு
முகர்ந்தமைக் காயல் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
இகந்தமைக் கென்செய்கு வேன்[துணை] செய்வதி
னியில்லையே. 292

---

290. மறைசிந்திடாது-களவு வெளிப்படாமல்; நறை-தேன்; மணந்தவர்-கூடிய தலைவர்; நிறை-நாணம்; தும்பி-வண்டு; முறை சிந்து பாடும்-முறையாகச் சிந்துப் பாடல்களைப் பாடும்; கறை சிந்து திங்கள் நுதலாய் - களங்கம் நீங்கிய பிறைத்திங்கள் போன்ற நெற்றியுடைய தோழியே.

291. தெள்ளினது-தெளிவுறுத்தியதாகிய உண்மைகளை; ஓர்-ஆராய்கிற! மன்னவர்-தலைவர்; உள்ளி-நினைத்து; விண்டு உரையாக் கரியும்-வாய்விட்டுச் சொல்ல முடியாத காட்சிகளும்; ஒண் தொடியாய் - சிறந்த வளையல் அணிந்த தோழியே; அம்போருக மின்-தாமரைப் பூவில் உள்ள திருமகள்; புள் இனமும்-நாரை முதலிய பறவைகளும்; கம்புள் இனமும் - நீர்க் காக்கைகளின் இனமும்; காயல் புளினமும்-குளக்கரையில் உள்ள மணல் மேடும்; இவை மூன்று காட்சிகள் என்க.

292. சுகந்தம்-நறுமணம்; மைக் கூந்தல் - மேகம் போன்ற கூந்தல்; மைக் காயல்-கரிய குளங்கல்; இகந்தமைக்கு-பிரிந்ததற்கு.

### இயல் பழித்து உரைத்தல்

சுகம்நகு மிக்குச்சொல் லாய்!தெய்வம் காட்டிமெய் சொல்லவல்ல
நகம்நகும் மல்புயத் தண்குட நாடர்க்கு நம்மைக்கண்டால்
முகம்நகும் நட்பன்றி நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
அகம்நகும் நட்பில்லை யே;இல்லை யேநமக் குத்தொழிலே. 293

### இயல்பட மொழிதல்

துஞ்சத் தரவல்ல ரின்பமெல் லாம்கண் துயில்விழித்தால்
நெஞ்சத் தராவது நீயறி யாயெதிர் நேர்ந்தவொன்னார்
முஞ்சத் தரணி முழுதாளும் சங்கர மூர்த்திநல்லூர்க்
கஞ்சத் தரசன்ன மே!பிரிந் தாரல்லர் காதலரே. 294

### தெய்வம் பொறைகொளச் செல்குவம் என்றல்

கொய்வம் பலர்சிந்தித் தீம்புகை காட்டிக் கொழும்படிதூய்த்
தெய்வம் பொறைகொளச் செல்குவ மால்செல்வி! செங்கழுநீர்
மொய்வம்பு வீசும் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பர்
பொய்வம்பு செய்தெம் மிகந்தா ரலருள் பொறுத்தியென்றே. 295

---

293. சுகம் நகும் - கிளியையும் எள்ளி நகையாடுகிற; இக்குச் சொல்லாய் - கரும்பு போல் இனிக்கும் சொல்லுடைய தலைவியே; நகம் நகும்–மலையைவென்ற; முகம் நகும் நட்பு-புறத்தே காட்டும் பொய் நட்பு; அகம் நகும் நட்பு - உள்ளூரச் செய்யும் மெய் நட்பு.

294, துஞ்ச-தூங்கும் போது; இன்பம் எல்லாம் தரவல்லர் என மாற்றுக. ஒன்னார் முஞ்ச–பகைவர் இறந்து போக; கஞ்சத்து-தாமரைப் பூவில் உள்ள.

295. வம்பு அலர்-புதிய பூக்களை; கொழும் படி-கொழுப்பு வாய்ந்த படித்தர மான உணவை; பொறை கொள - சாந்தியடைய; வம்பு வீசும் - வாசனை வீசும்; பொய் வம்பு-பொய்யாகிய துன்பம்; இகந்தார் அலர்-பிரியவில்லை; உள்-மனம்; ''தலைவர் இகந்தாரலர்; உள் பொறுத்தி என்று தெய்வம் பொறைகொளச் செல் வம் என இயைக்க.''

### இல்வயின் செறித்தமை சொல்லல்

காப்புக்கு வைத்த மறத்தின ளானாளாய்; காரிகையாய்!
கூப்புக்கு வைத்தசெங் கைவீ டணனைக்கைக் கொண்டிலங்கை
மூப்புக்கு வைத்த குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
சேப்புக்கு வைத்தசெந் தேன்போ லளியேனை இற்செறித்தே.
296

### செவிலி கனை இருள் அவன்வரக் கண்டமை கூறல்

அளிகாலும் கண்ணி! நம் கண்ணனை
யார்வர வன்னைமுன்னாள்
களிகாலும் கண்ணியக் கண்ணால்கண்
டாள்;தெவ்வர் கால்நடையாய்
முளிகா னடையச் சிலைவாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
தளிகாலும் பூம்புன்னைக் காவூ டிரவு தரும்குறிக்கே. 297

## தலைவி அறத்தொடு நிற்றல் முற்றும்

## பாங்கி அறத்தொடு நிற்றல்

### எறிவளை வேற்றுமைக்கு ஏது வினாதல்

பாசனந் தன்னொடு நண்ணாதுண் ணாதுமென் பால்முளரி
ஆசனந் தாங்கும் அரசனம்; கல்லென் றகலிகைக்கு
மோசனம் தந்த குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
வாசல்நந் தோதப்பும் நம்காவல் நீதப்பி வந்ததென்னே. 298

---

296. மறத்தினள் - கொடியவள்; இலங்கை மூப்புக்க வைத்த - இலங்கை நீடித்து வாழ்தற்காக அரசனாக்கி வைத்த; சேப்புக்கு-சேமிப்பிற்காக; அளியேனை- இரங்கத்தக்க என்னை.

297- அளிகாலும் - கருணை பொழியும்; களிகாலும் - மகிழ்ச்சி சிந்தும்; கண்ணியக் கண் - பெருந்தன்மை வாய்ந்த கண்; தெவ்வர் - பகைவர்; முளி கான்- சிதைந்த காடு; தளி காலும் - நீர்த்துளிகளைக் சிந்துகின்ற; காவூடு - சோலையின் உள்ளே; காவூடு இரவு தரும் குறிக்குக் கண் அனையார் வர அன்னை கண்டாள் என முடிக்க.

298. பாசு அனம் - புதிய சோறு; பால்முளரி - வெண்தாமரை; அரச அனம் - உயர்சாதி அன்னம். (ஈண்டுத் தலைவி) மோசனம் - நீக்கம். கல் என்று சொல்லுமாறு கிடந்த அகலிகைக்குப் பாவ விமோசனத்தைத் தந்தவன் இராமன். அவனே சங்கரமூர்த்தி என்க. வாசல் நந்தோ தப்பும் - வாசலில் வளர்க்கப்படும் சங்கு காவல் தப்பிப் போய்விட்டது.

### வெறி விலக்கல்

வில்கா லிளஞ்சுடர் வாள்வாங்கி வேறொரு வேலனைநீ
பிற்கா லினைப்பிடி யென்பீர்; முதலை பிடித்திழுப்ப
முற்கா லிபம்சொன்ன நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
வற்காலி யெங்கள் மலர்க்காலி நோய்க்கு மருந்தல்லவே. 299

### வெறிவிலக்கிய வழி வினாதல்

தார்கொண்ட பேரும் சமண்போக்கிச் சைவம் தரப்பிறந்தான்
ஊர்கொண்ட பேரு முடையதென் றோமுத்துக்
கொண்தொடிமார்
மோர்கொண்ட செல்லக் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
வார்கொண்ட கொங்கை! நம் வேள்வெறி யாடல்
மறுப்பதென்னே. 300

### பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்

குகைவிண் டுருகுபொன் னன்னநின் பார்வைக் குறிப்புமனப்
பகைவிண்ட தென்றெய்த்த வஞ்சியன் னேயொரு
பார்த்திபர்தேன்
முகைவிண்ட தாரை, குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
நகைவிண்ட கஞ்ச முகத்தாட்கு நல்கினர் நம்புனத்தே. 301

---

299. வில்கால் - ஒளி வீசுகின்ற; முற்கால் - முன்னொரு காலத்தில்; இபம் சொன்ன - யானை ஆதிமூலமே என்று அழைத்த; வற்காலி - வெள்ளாடு. மலர்க் காலி - மலர் மணம் வீசும் தலைவி.

300. தார் கொண்ட பேர் என்பது மாலை; அதாவது குற்றம்; சமண் போக்கிச் சைவம் தரப் பிறந்தான் ஊர் - சமண சமயத்தை ஓட்டிச் சைவத்தைத் தருதற்காகப் பிறந்த ஞான சம்பந்தனது ஊர்; அதாவது சீர்காழியின் மறுபெய ராகிய கொச்சைவயம்; கொச்சை என்பது இழிவு. இவை இரண்டையும் உடை யது என்பது குற்றமுடையது. இழிவுத் தன்மை உடையது என்பதாகும். வெறி யாடலை மறுத்தற்கு இவ்விரண்டையும் காரணமாக்கிக் கேட்கிறாள் சேவிலி. ஒண்தொடி மார் - சிறந்த வளையலை அணிந்த இடைச்சிமார்; முத்துக்கு மோர் கொண்ட - தன்னிடம் முத்தம் பெறுதற்காக அவரிடமுள்ள மோரைத் திருடிக் கொண்ட; வார் - கச்சு.

301. குகை - பொன்னுருக்கும் கலம்; விண்டு - வெடித்து; பார்வைக் குறிப்பு மனப்பகை விண்டது - பார்வையின் நோக்கம் மனத்தில் உள்ள வெறுப்பைச் சொல்லியது. எய்த்த வஞ்சி அன்னே - இளைத்த வஞ்சிக்கொடி போல்வாளின் தாயே; பார்த்திபர் - அரசனை ஒத்த தலைவர்; தாரை நல்கினர்- மாலையைக் கொடுத்தார். கஞ்ச முகத்தாட்கு - தாமரை போன்ற முகமுடைய தலைவிக்கு.

**புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்**

வழுநீர்மை நீங்கிய பூமியை ஆதி வராகமெடுத்து
எழுநீர்மை போலெடுத் தேந்திவந் தான்முன்னம்
ஈர்ம்பொருநை
முழுநீரில் நீந்திக் குடநாடன் சங்கர மூர்த்திவெற்பில்
கழுநீர் விழியுன் மகளையோர் காளை கரையிடத்தே. 302

**களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்**

மாதங்கம் சாய்த்திடம் மாதங்கம் தோய்ந்த மதங்கமெனச்
சூதங்க மாம்முலை மாதங்கம் தோய்ந்தொரு
தோன்றல்நின்றான்
மூதங்க மான மனுநீதிச் சங்கர மூர்த்திநல்லூர்
போதங்க மாமெழில் அம்மே! நம் மேனல் புனக்கிறிக்கே. 303

பாங்கி அறத்தொடு நிற்றல் முற்றும்.

## செவிலி அறத்தொடு நிற்றல்

**மின்னிடை வேற்றுமை கண்டு தாய் வினாதல்**

தோட்டுப் பதுமத் தனமே வடிவொடு தோற்றமும்பொற்
கோட்டுப் பசும்பொன்னு முன்நாள்கண் டோமில்லை
கொண்டலெட்டும்
மோட்டுப் பணைமரு தம்சாய்த்த சங்கர மூர்த்திக்குட
நாட்டுப் பணிலக் கரத்தாட்கிந் நாளெங்ஙன் நண்ணியதே.
304

---

302. குற்றம் நீங்கிய பூமிதேவியை ஆதிவராக மூர்த்தி கடல் நீரிலிருந்து எடுத்துக் கொண்டு மேல் எழுந்தது போல உன் மகளை ஓர் காளை பொருநை யாற்று நீரில் நீந்தித் தூக்கி வந்தான் என்கிறாள் தோழி.

303. மாதங்கம் சாய்த்து - யானையைக் கொன்று; இடப்பக்கத்தில்; மாது அங்கம் தோய்ந்த-உமாதேவியின் உடம்பின் ஒரு கூறு தோயப் பெற்ற; மதங்கம் என - யானை போலும் சிவனே எண்ணும்படி. முலை மாதங்கம் - நகிலாகிய பெரிய பொன்னை. மூது அங்கம்-பழைய நூல் வகையான; ஏனல் புனக்கிறிக்கே- தினைப் புனத்தின் வழியிலே.

304. தோட்டுப் பதுமம் - இதழ்களை உடைய தாமரை. பசும் பொன்னும்- பொன்போன்ற பசலை நிறமும். கொண்டல் எட்டும் - மேகத்தை எட்டிப் பிடிக்கும்; மோட்டுப்பணை - உச்சிக்கிளை; பணிலக்கரத்தாட்கு - சங்க வளையல் அணிந்த கையுடைய தலைவிக்கு.

### செவிலி நற்றாய்க்கு முன்னிலை மொழியால் அறத்தொடு நிற்றல்

நீர்தந்த புற்புதம் நீக்கியுன் மானுக்கு நீண்டகைமாப்
போர்த்தந்தம் துண்டித்த வேந்தர்மின் னேயிகல் போரரக்கர்
மூர்த்தந் தனைமுனி வில்வாங்கும் சங்கர மூர்த்திநல்லூர்
வார்த்தந்த கொங்கை வரைபார்த் துவமைமுன்
மாற்றினரே. 305

செவிலி அறத்தொடு நிற்றல் முற்றும்.

## உடன் போக்கு

### பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தல்

தலைவிலை கொள்(க)இறை யென்றுநும் மாற்றலர்
தந்ததெல்லாம்
மலைவிலை கொள்(க)எனத் தந்தாலு மெந்தமர்
மங்கைநல்லாள்
முலைவிலை கொள்கிலர் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பா
உலைவிலை கொள்ளென் னுரை;போது மாதுட
னூரகத்தே. 306

### ஆங்கு அவன் மறுத்தல்

நத்தூரச் சந்தன வெற்பூர் பொருனை நளிகடல்பாய்
அத்தூர முண்டுகண் டாயணங் கேகி லலையில்சங்க
முத்தூருங் காயல் குடநாடன் சங்கர மூர்த்திநல்லூர்
இத்தூர மும்செல்லு மோவஞ்சித் தாளி னிணைத்தளிரே. 307

---

305. புற்புதம் - நீரில் தோன்றும் மொக்குள்; மானுக்கு - தலைவிக்கு கைமா - யானை; மூர்த்தம்-வாழ்நாள் ; தலைவிக்கு இப்போது கொங்கை வரையாகப் பெருத்தலைக்கண்டு முன்பு உவமை கூறப்பட்ட புற்புதத்தை நீக்கியும் யானைத் தந்தத்தைத் துண்டித்து உவமைகளை மாற்றி விட்டனர் என்கிறாள் தோழி.

306. தலைவிலை - தமதுதலை தப்பிக்க விலையாகக் கொடுக்கும் கப்பப் பொருள்; மாற்றலர் - பகைவர்; மலைவிலை-மயக்கமின்றி; முலைவிலை-பரிசப் பொருள்; உலைவு இலை - மனம் வருத்தமின்றி; மாதுடன் ஊரகத்தே போது- தலைவியோடு உன் ஊர்க்கு உடன்போக.

307. நத்து ஊர்-சங்குகள் ஊரும்படி; வெற்பு ஊர் பொருநை - மலையில் ஒடிவரும் பொருநை யாறு. மலையில் தோன்றும் பொருநை கடலில் போய்ச் சேரும் அவ்வளவு நீண்ட தூரம், எம்மூர்க்குப் போகும் தூரமாகும். ஆகவே தலைவியின் கால்களாகிய தளிர் நடந்து செல்லுமோ என்கிறான் தலைவன்.

### அவள் உடன்படுத்தல்

வெப்பாலும் பாலை குளிர்ந்திடு மேமெல்ல வேய்ந்திருண்ட
மைப்பால்ஐம் பாலை யுடையாட்கன் றோதிரு வள்ளுவர்சொல்
முப்பாலும் தேர்ந்த குடநாடன் சங்கர மூர்த்திவெற்பா
கொப்பாலும் தெய்வத் தருநீ; அவளும் குலக்கொடியே. 308

### தலைவன் போக்கு உடன்படுதல்

திக்கண வாயிரம் செங்கதி ரோன்கரம் தீண்டவஞ்சும்
அக்கண மாம்பரல் வெம்பாலை செல்ல அனுமதிமன்
முக்கண்ணம் மானை மறவாத சங்கர மூர்த்திநல்லூர்
மைக்கண்ணிம் மானை மறவா திருத்துமென் வன்நெஞ்சமே. 309

### பாங்கி தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தல்

மற்றொன் றியகுறுங் காடையும் கோடுயர் வாங்கயின்வேல்
நெற்றுஞ் சிலம்பும் நெறிகடந் தேறி, நினைத்தபடி
முற்றும் படிசெய் மனுநீதிச் சங்கர மூர்த்திநல்லூர்
உற்றுன் கவலை யொழிநாளு மூரனோ டொண்ணுதலே. 310

### தலைவி நாணழிவு இரங்கல்

ஆலத் தனைகண்ணி! யன்பரன் போடென தன்புமன்போ
கோலப் பெருந்[தனு] நாணால் குழைந்தெனக் கூந்தற்பனை
மூலத் தினைத்தொழும் நல்லூரன் சங்கர மூர்த்திவெற்பில்
சாலத் தனுபெரு நாணால் குழையும் தலைகுனிந்தே. 311

---

308. வெப்பு ஆலும்-வெப்பம் பரவுகிற; கொப்பு - கிளை. தலைவனே நீ தெய்வத் தரு (மரம்); அத்தலைவியும் கொடி. மரத்தில் கொடி படருமானால் பாலை நிலமும் குளிர்ந்திடும் என்கிறாள் தோழி.

309. திக்கண ஆயிரம் கரம் - திக்கூட்டமான ஆயிரங்கைகள்; பரல் - சிறு கற்கள். சூரியனின் கதிரும் தீண்ட அஞ்சுகின்ற வெப்பமுடைய பரல்கற்கள் என்க.

310. சிறிய காடை என்ற பறவையும் வேல மரத்தின் நெற்றுக்களும் ஒலிக்கின்ற வழி என்க.

311, ஆல்-ஆல கால விடம்; பனை மூலத்தினை - பனையடியில் உள்ள சிவ பெருமானை; பெருந்தனு நாணால் குழைந்தது என-பெரிய வில் நாண் கயிற்றால் வளைக்கப்பட்டது போல; சாலத்தனு நாணால் குழையும்-சிறந்த என் உடம்பும் நாணத்தால் குறுகிப்போகும்.